# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 57 இதழ் 5

॥ न कर्मणा न प्रजया धनेन
त्यागेनैके अमृतत्वमानशुः ॥

பிங்கள ௵ வைகாசி ௴ 

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!

—சுவாமி விவேகானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை - 600 004



# காந்தியடிகளின் பொன்மொழிகள்




★ உண்மையைத்தான் நான் கடவுள் என்று தொழுகிறேன். இன்னும் நான் கடவுளைக் காணவில்லை. ஆனால் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இப்படித் தேடுவதில், நான் அருமை பெருமையாகப் பேணுகிற எதையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன். என் உயிரைக்கூடத் தியாகம் செய்யத் தயாராக இருப்பேன்.

★ நான் கடவுளை நேருக்கு நேராகக் காண விரும்புகிறேன். உண்மைதான் கடவுள் என்று எனக்குத் தெரியும். என்னைப்பொருத்தவரையில் கடவுளை அறியப் பயன்படும் ஒரே சாதனம் அஹிம்ஸை-அன்பு என்பதுதான்.

★ எப்படியோ ஒரு வழியில் கடவுள் நமக்கு உதவிபுரிய வருகிறார். நம்பிக்கையை இழந்துவிட வேண்டாம் என்றும், நாம் அழைக்கும் போதெல்லாம் தாம் வரத் தயாராகயிருப்பதாகவும், ஆனால் நமது நிபந்தனைகளின்படியின்றி, தமது நிபந்தனைகளின்படி வருவதாகவும் அவர் நமக்கு உணர்த்துகிறார். இது நான் கண்ட உண்மை. ஒரு தடவைகூட, கடைசி நேரத்தில் அவர் என்னைக் கைவிட்டது கிடையாது.

★ இந்தப் பரந்த உலகத்தில் யாதொரு உதவியும் ஆதரவும் இல்லாமல் திக்குத் திசை தெரியாது தவிக்கும் இருள் மண்டிய நேரத்திலும், கடவுளுடைய திருநாமத்தின் சக்தி நமக்குத் தெம்பு கொடுக்கிறது. நமது சந்தேகங்களையும், நிர்க்கதியான நிலையையும் தூரத் துரத்திவிடுகிறது.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

★ சில குழப்பங்களைத் தவிர்ப்பதற்காக, இந்த மாதம் மே (வைகாசி) முதற்கொண்டு உங்களுடைய சந்தா எண்ணை மாற்றிப் புதிய சந்தா எண் கொடுக்கப்பட்டிருக்கிறது. இனி முதற்கொண்டு இப்போது கொடுத்துள்ள இந்தப் புதிய சந்தா எண் வழக்கத்திற்குத் தொடரும்.

★ அன்பர்கள் தமது பெயர், விலாசம் முதலியவைகளைத் தெளிவாக எழுதி அனுப்பும்படி வேண்டுகிறோம்.

★ அன்பர்கள் எங்களுக்கு எழுதும் எல்லாக் கடிதங்களிலும், மணியார்டர் கூப்பன்களிலும் தங்களுடைய சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிட வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு மாதமும் பத்திரிகையைச் சுற்றி அனுப்பும் கவரிலுள்ள விலாசத்தில், தங்களுடைய சந்தா எண் இருக்கிறது. அன்பர்கள் அதைக் கவனமாகக் குறித்து வைத்துக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

★ விலாச மாற்றம் இருக்குமானால் உடனுக்குடன் எங்களுக்குத் தகவல் தெரிவியுங்கள். இல்லாவிடின் பழைய விலாசத்திற்கே பத்திரிகை சென்று கொண்டிருக்கும்.

★ தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைக் கவனமாகச் சரிபார்த்துக் குறையிருப்பின் உடனடியாகத் தெரிவியுங்கள்.

★ சில சமயங்களில் அனுப்பப்படும் பத்திரிகை எங்களுக்கே திரும்பி வந்து சேருகிறது. சில நாட்களுக்குப் பிறகு அதே சந்தா அன்பர்கள், தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கடிதம் எழுதுகிறார்கள். தயவுகூர்ந்து தாங்கள் ஊரில் இல்லாத சமயங்களில் இதழைப் பெற்றுத் தங்களிடம் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்துகொள்ளுங்கள்.

★ சில அன்பர்கள் ஆங்கில மாதத்தின் ஆரம்பத்திலேயே தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கேட்டுக் கடிதம் எழுதுகிறார்கள். ஆங்கில மாதம் 12 தேதிக்குப் பிறகே பத்திரிகை அனுப்பப்படுகிறது. ஆகவே 25 தேதி வரையிலும் தங்களுக்குப் பத்திரிகை வந்து சேராவிட்டால் எங்களுக்குக் கடிதம் எழுதலாம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தா தாரராகச் சேர்ந்துவிடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர் சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போல சந்தாவைச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாவைப் புதுப்பித்துக்கொள்வதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தெய்வத் தொண்டாகும். சந்தாதாரர்கள் இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒருசிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

★ சந்தா எண் குறிப்பிடாமல் வரும் கடிதங்களைக் கவனித்து ஆவன செய்வதற்கு நீண்ட தாமதமும் பல சிரமங்களும் ஏற்படுகின்றன. ஆகவே அன்பர்கள் **தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும், சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுதும்படி** மீண்டும் மீண்டும் கேட்டுக்கொள்கிறோம்.

நிர்வாகி

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | பிங்கள ஆடு வைகாசி மீ | இதழ் 5 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்






# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

தொகுதி 57 | பிங்கள ஷு வைகாசி மீ | இதழ் 5

## பிரார்த்தனை

त्रयी साङ्ख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यामिति च ।
रुचीनां वैचित्र्यादृजुकुटिलनानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥ —शिवमहिम्नस्तवः

*த்ரயீ, ஸாங்க்யம், யோக: பசுபதி மதம் வைஷ்ணவமிதி,*
*ப்ரபிந்நே ப்ரஸ்தாநே பரம் இதம் அத: பத்யம் இதிச |*
*ருசீநாம் வைசித்ரியாத் ரிஜுகுடில நாநாபத ஜுஷாம்*
*ந்ரிணும் ஏகோகம்யஸ் த்வம் அஸிபயஸாம் அர்ணவ இவ ||*

—சிவமஹிம்ந ஸ்தோத்ரம்

வைதிகம், சாங்கியம், யோகம், பாசுபதம், வைஷ்ணவம் என்னும் பலவகைப்பட்ட மதங்களுக்குள்ளே ஒன்று சிறந்ததென்று சிலரும், இன்னென்று சிறந்ததென்று மற்றும் சிலரும் கூறுவர். ஆனல் நதிகள் நேராகவும், வளைந்தும் பற்பல வழிகளாக ஓடிக் கடைசியில் கடல் என்னும் ஒரே இடத்தில் சங்கமமாவதைப் போலவே, மக்களும் அவரவர்களுடைய ருசிபேதங்களுக்குத் தக்கபடி, வேறுவேறு நெறிகளைப் பின்பற்றுபவர்களாக இருந்தாலும், அவர்கள் கடைசியில் அடையும் இடமாக இருப்பது பரமசிவனுகிய நீயே.

போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி.

—திருச்சதகம்





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

பாம்புகள் விஷ ஜந்துக்கள். நீ அவைகளைப் பிடிக்க முயற்சிசெய்தால், உன்னை அவைகள் கடித்து விடுவது நிச்சயம். ஆனல், வசியப்பொடியால் பாம்பை மயக்கி, அதை ஆட்டக் கற்றுக் கொண்டவனுக்கு, பாம்புகளைப் பிடிப்பது சிரமமான காரியம் அல்ல. ஏழு பாம்புகளை வேண்டு மானுலும் அவன் பிடித்துத் தனது கழுத்தில் ஒன்றன்மேல் ஒன்ருகச் சுற்றிப் போட்டுக்கொண்டு விளையாட முடியும். அதைப்போல ஆத்மஞானத்தை அடைந்தவனுக்கு உலகில் வாழ்வதால் ஆபத்தில்லை.

பணத்தைத் தேடி அலைபவன் கடவுளை அடையும் பாதையிலிருந்து விலகிவிடுகிருன். இந்தக் கருத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருமுறை இளைஞராகிய தமது நெருங்கிய சீடர் ஒருவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ஆத்ம ஞானத்தை விரைவிலேயே பெற்று விடும் தகுதிகளைக் கொண்டிருந்த அந்தச் சீடரிடம், பரமஹம்ச தேவர் மேலும் கூறியதாவது:—''உலகிலுள்ள மற்ற மக்களைப் போலவே நீயும் இப்போது சம்பளத்திற்காக ஒரு வேலையை ஏற்றுக்கொண்டாய்.ஆனல் நீ உன்னுடைய தாயாரைக் காப்பாற்றுவதற்காக வேலையை ஏற்ருய். இல்லாவிட்டால், இந்தக் காரியத்தைச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லையா? வெட்கக்கேடான இதை நீ போய் செய்ய லாமா? என்று நான் கேட்டிருப்பேன்.'' இதை ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருமுறைக்கு நூறு முறை அந்தச் சீடருக்குத் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்லிவிட்டு, ''ஆண்டவனுக்கு மட்டுமே நீ தொண்டு செய்வாய்'' என்று உபதேசித்தார்.

நான் இந்தத் துணியை என்னுடைய முகத்துக்கு எதிராகப் பிடித்துக்கொண்டால், நான் முன்பு போலவே உன்னுடைய அருகில் இருந்தாலும் நீ என்னைப் பார்க்க முடியாது. அதைப் போல இறைவன் மற்ற எல்லாப் பொருள்களை விடவும் உன்னிடம் மிகமிக நெருங்கியே இருக் கிருர். என்ருலும் அகங்காரமாகிய திரையை நீ வைத்திருப்பதன் காரணமாக, உன்னல் அவரை பார்க்க முடியவில்லை.

வீட்டிற்கு வெளியே சிறு குழந்தைகள் மரப்பொம்மைகளை வைத்துக்கொண்டு, எந்தவித மான பயமும் கவலையும் இல்லாமல் மனம் போனபடி எல்லாம் விளையாடுகின்றன. ஆனல் அங்கு அவர்களுடைய தாய் வந்தவுடனே, விளையாடிக் கொண்டிருந்த மரப்பொம்மைகளை எல்லாம் குழந்தைகள் தூக்கி எறிந்துவிட்டு ''அம்மா, என் அம்மா!'' என்று கூவிக்கொண்டே அவளிடம் ஓடி வருகின்றன. ஓ மனிதனே! நீயும் இப்போது குழந்தைகளைப் போலவே, இந்த ஜடமாகிய உலகில் பணம், கௌரவம், புகழ் போன்ற விளையாட்டுப் பொருள்களை வைத்துக்கொண்டு விளை யாடுகிருய். அதனல் கவலை, பயம் போன்றவைகளை உணராமல் இருந்து கொண்டிருக்கிருய். ஆனல், எப்போதாவது ஒரே ஒருமுறை நீ தெய்விக அன்னையைக் கண்டுவிட்டால், அதன்பிறகு மேலே சொல்லப்பட்ட இலௌகிக இன்பங்கள் எதிலும் நீ சுகம் காணமாட்டாய். அவைகளை எல்லாம் விசி எறிந்துவிட்டு நீ அவளிடமே ஓடுவாய்.

அகங்காரமானது எளிதில் நீங்குவதில்லை. அதனல்தான் நாம் இந்த உலகில் மீண்டும் மீண்டும் பிறவித் துன்பங்களை அனுபவிக்கிருேம்.



ஓம்




விஜயதீபம்

## சத்திய வாக்கு

உபநிஷதங்களின் மகத்தான உண்மைகள் உங்கள் முன்னுல் இருக்கின்றன. அவற்றை உணருங்கள். அவைகளுக்கிணங்க வாழ்வு நடத்துங்கள். அப்போது இந்தியாவின் கதிமோட்சம் தானே கிடைத்து விடும்.

ஒவ்வொரு தேசமும் தன்னைத் தானே காப்பாற்றிக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தன்னைத்தானே ரட்சித்துக்கொள்ள வேண்டும். பிறர் உதவியை எதிர்பார்த்தல் ஆகாது. இதை எப்போதும் நினைவில் வையுங்கள்.

என் மகனே! உறுதியாக நில். பிறர் உதவியை எதிர்பார்க்காதே. வேறு மனிதர்களின் உதவியைக் காட்டிலும் ஆண்டவனுடைய உதவி எவ்வளவோ பெரிதல்லவா? பரிசுத்தனுயிரு, பகவானையே நம்பு. அவரை நம்பியுள்ளவரை நீ நேர்வழியில் செல்கிறுய். உன்னை எதுவுமே எதிர்த்து நிற்க முடியாது.

Vivekananda

(சுவாமி விவேகானந்தர்)

## கடவுள் சிந்தனை

மனிதனுக்குப் பெரிய நன்மையைத் தரக்கூடியது, கடவுள் சிந்தனையைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்று சொல்லலாம்.

உலகில் தோன்றியுள்ள எல்லா பக்தி சம்பிரதாயங்களுமே, சதா சர்வகாலமும் ஆண்டவனின் நினைவைக் கொண்டிருக்கும்படி அறிவுறுத்துகின்றன. மனித வாழ்க்கை மிகமிக குறுகியது. இந்தக் குறுகிய வாழ்க்கையில், கடவுளின் சாட்சாத்காரம் என்னும் மிகப்பெரிய பணியைச் செய்து முடிக்க வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம்.

வேறுவேறு வண்டிகளில் ஏறியும் இறங்கியும் பிரயாணம் செய்து, தூர தேசத்திலுள்ள ஓர் ஊருக்குப்போய்ச் சேருவதைப் போல, பல உடல்களிலும் ஜீவன் இன்பமும் துன்பமுமாகிய பல அனுபவங்களையும் பெற்று முடித்தான பின்பு முக்தி பெறுகிறுன்.

மனித வாழ்க்கை நிலையானதல்ல. ஜீவன் மேற்கொண்டுள்ள நீண்ட பயணமாகிய யாத்திரையில் தங்கும் ஓர் இடமாகவே மனித உடல் இருக்கிறது. இதைப் போலவே தங்கும் இடங்களாக பல உடல்களை ஜீவன், பல பிறவிகளிலும் கொண்டிருக்கிறுன். அவன் மேற்கொண்ட பல பிறவிகளிலும் எண்ணற்ற அல்லல்களை அனுபவித்துக்கொண்டு வருகிறுன். புல்லாகப் பிறந்தாலும், மரமாகப் பிறந்தாலும், பறவையாகப் பிறந்தாலும், விலங்காகப் பிறந்தாலும் —இப்படி எத்தனையெத்தனை பிறவிகளைத்தான் ஜீவன் கடந்து வந்தாலும் அல்லல்கள் என்னவோ ஒய்ந்தபாடில்லை.

தனக்குச் சொந்தமில்லாத எத்தனை தங்கும் இடங்களை உடல்களாகப் பெற்றுலும், வாழ்க்கைப் பிரச்னையைத் தீர்த்துவிட முடியாது.

ஜீவனின் உண்மை இருப்பிடம் கடவுள், ஆத்மா, பிரம்மம் என்று சொல்லப்படும் பரம் பொருளே ஆகும். அந்த இடத்தை முடிவாகச் சென்று அடையும்வரையிலும், உயர்ந்ததும் தாழ்ந்ததுமாகிய பிறவிகளாகிய வட்டத்திற் குள் திரும்பத் திரும்ப வளைய வளைய வந்து கொண்டிருப்பதைத் தவிர ஜீவனுக்கு வேறு வழியே இல்லை.

மனிதப் பிறவியை, எண்பத்து நான்கு இலட் சம் பிறவிகளுக்குப் பிறகு ஒரு ஜீவன் அடைவ தாகப் புராணங்கள் கூறுகின்றன. புராணங்கள் சொல்லும் இந்தக் கருத்து, கற்பனையையும் சேர்த்து மிகைப்படுத்திக் கூறப்பட்டது என்று கொண்டாலும்கூட, ஏராளமான பல பிறவி களுக்குப் பிறகே மனிதப் பிறவி வாய்க்கிறது என்பதில் சந்தேகத்திற்கே இடமில்லை.

முடிவிடமாகிய ஆண்டவனை அடைவதற்கு மற்ற எல்லாப் பிறவிகளையும் விட தலைசிறந்த சாதனமாக இருப்பது மனிதப் பிறவியே ஆகும்.

ஆகவே தலைசிறந்த சாதனமாகவும், மிகப் பெரிய வாய்ப்பாகவும் கிடைத்துள்ள மனிதப் பிறவியை, கடவுளைச் சதா சர்வகாலமும் நினைத்து வாழ்வதன் மூலம் பயனுடையதாக் கிக் கொள்ளும்படி மகான்கள் மீண்டும் மீண்டும் ஒருசிறிதும் சலிப்பில்லாமல் வலியுறுத்தியிருக் கிறார்கள்.

''எல்லாக் காலங்களிலும் என்னை நினைவி லிருத்திப் போர் புரி. மனதையும் புத்தியையும் என்னிடம் அர்ப்பணம் செய்து சந்தேகமின்றி என்னையே வந்தடைவாய்.'' என்று கீதையில் ஸ்ரீபகவான் கூறுகிறார். இதில் உலகில் ஒருவர் வாழவேண்டியமுறை சுட்டிக் காட்டப்பட்டிருக் கிறது. உலகில் நாம் எந்த நிலையில் இருந் தாலும், எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும், எந்தக் கடமையில் ஈடுபட்டிருந்தாலும் கடவு ளின் நினைவை, அல்லது அதையே வேறுவித மாகச் சொல்வதானால், வாழ்க்கையின் ஒரே இலட்சியமாகிய கடவுள் சாட்சாத்காரத்தை மறவாமல் எப்போதும் கொண்டிருக்க வேண் டும்.

கடவுளின் நினைவைத் தவிர்த்த உலக நினைவு கள், நமது முயற்சியின்றியே எப்போதும் நம்மை ஆக்கிரமித்திருக்கின்றன. கடவுளின் நினைவை எப்போதும் கொண்டிருக்க வேண்டுமானால், அடிக்கடியும் கடவுளை நினைத்துப் பழகும் முயற்சி முற்றிலும் இன்றியமையாதது. கடவுளை நினைத் துப் பழகும் பழக்கம் உறுதி அடைய அடைய, கடவுளின் நினைவு இயல்பாகவே உள்ளத்தில் பெருமளவில் இடம்பெறும். கடவுளின் நினைவை அதிகமான அளவில் உள்ளத்தில் கோயில் கொள்ளும்படி செய்வதைவிடவும், பெரிய செல் வம் உலகிலேயே இல்லை.

கடவுளின் நினைவு எப்போதும் உள்ளத்தில் இடம் பெறுவதற்கு, அதற்காகவே கடுமை யாக முயற்சி செய்வதைவிட வேறுவழி இல்லை. இயன்றபோதெல்லாம் அடிக்கடியும் தனி மையை நாடிச் சென்றுப் பிரார்த்தனை, ஜபம், தியானம் ஆகியவைகளின் மூலமாக ஆண்ட வனை நினைப்பது; உண்மை பக்தர்களாகிய சான்றோர்களோடு பழகி, அவர்கள் கூறும் அருள்மொழிகளைக் கவனமாகக் கேட்கவும் கடைப்பிடிக்கவும் முயற்சிப்பது; அனுபூதிமான் களின் அரிய கருத்துகள் அடங்கிய சாஸ்திரங் களைப் படித்து உள்ளத்தில் ஆழப்பதியும்படி செய்வது; தெய்விகம் ததும்பும் இடங்களுக்குச் செல்வது–இவைபோன்ற பழக்கங்கள் சாதக னுக்குப் பெருமளவில் துணைபுரிந்து, 'கடவுளின் நினைவு தொடர்ந்தும் ஆழ்ந்தும் உள்ளத்தில் இடம் பெற உதவி செய்கின்றன.

உலகப் பற்றுள்ள மக்கள், தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக, எவ்வளவு துன்பங்களை வேண்டுமானாலும் மேற் கொண்டு அயராமல் பாடுபடுகிறார்கள். அதைப் போலவே உத்தம சாதகர்கள் கடவுளின் நினைவு தொடர்ந்து தமது உள்ளத்தில் இருப்பதற்காக, எத்தனை துன்பங்களை வேண்டுமானாலும் மேற் கொண்டு அயராமல் பாடுபட்டிருக்கிறார்கள். இதை நாம் மறந்துவிடக் கூடாது.

ஓவியம் எழுதப் பழகுபவன், நல்ல ஒரு சித் திரத்தை முன்மாதிரியாக வைத்துக்கொண்டு ஓவியம் எழுதிப் பழகுகிறான். அதைப்போலவே மகான்களையும் தலைசிறந்த பக்தர்களையும் நல்ல சித்திரங்களாக நாம் முன்மாதிரியாக வைத்துக் கொண்டு, நமது வாழ்க்கையாகிய சித்திரத்தை வரைந்து பழகிக்கொண்டே இருக்கவேண்டும். 'முயற்சி திருவினையாக்கும்', 'முயற்சி உடை யார் இகழ்ச்சி அடையார்', 'உழைப்பின்வாரா உறுதிகள் உளவோ?'

'தூக்கம் உன்னை ஆட்கொள்ளும்வரை வேதாந்த விசாரத்தில் ஈடுபடு; மரணம் உன்னை

ஆட்கொள்ளும்வரை வேதாந்த விசாரத்தில் ஈடுபடு’ என்று வேதாந்தம் கூறுகிறது. இதன் மூலம் அரிய ஓர் உண்மையை நாம் உணரலாம். படுக்கைக்கு நாமாகச் சென்று தூக்கம் வருவதற்காகக் காத்திருப்பதுமல்ல; மரணத்தை நாமாக நாடிச் செல்வதுமல்ல. அவைகளாக நம்மை நாடிவந்து நம்மை செயலற்றுப் போகும்படி செய்யும் வரையிலும், வாழ்நாள் முழுவதும் கடவுள் சிந்தனையை உடையவர்களாயிருக்க நாம் முயற்சிப்பது அவசியம்.

தலைசிறந்த பக்தர்கள், சதாசர்வ காலமும் ஆண்டவனைத் தொழுதும், ஆண்டவனின் குழந்தைகளாகிய மக்களுக்குத் தொண்டு செய்தும் வாழ்கிறார்கள். அவைகளைத் தவிர உலகிலுள்ள வேறு எதனோடும் அவர்கள் தங்களைப் பிணைத்துக் கொள்வதில்லை. கடவுள் நினைவு, உயர்ந்த வாழ்க்கை, பரிசுத்தம் ஆகியவைகள் ஒன்றோடு ஒன்று மிகவும் நெருங்கியவைகள். தனித்தனியாகப் பிரித்துப் பார்க்க இயலாதவைகள். கடவுளின் நினைவு ஒன்றை மட்டுமே உறுதியாகப் பற்றிக்கொண்டு விட்டோமானால், உலகில் உண்மையில் உயர்ந்தவைகள் எத்தனை உண்டோ, அத்தனையும் நமக்கு உரிமையாகி விடும். ஆகவேதான் மகான்கள் சுருக்கமாக, ‘கடவுளை எப்போதும் நினைத்து வாழுங்கள்’ என்று உபதேசித்தார்கள் போலும். மகான்களின் உபதேசங்களுக்குள்ள பலமெல்லாம், அவர்கள் அந்த வாழ்க்கையை வாழ்ந்தார்கள் என்பதில்தானே அடங்கியிருக்கிறது?

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், மனித குலத்தைத் தெய்வத்தை நோக்கி அழைத்துச் செல்வதற்காகவே வந்தவர். அவர், பக்தர்கள் உலகில் வாழவேண்டிய முறைகளை அழகிய பல எளிய உதாரணங்களின் மூலம் பல சமயங்களில் கூறியுள்ளார். அவைகளுள் சில கீழே தரப்படுகின்றன:

‘‘உனது கடமைகளை எல்லாம் செய்து வா. ஆனால் உனது உள்ளத்தைப் பகவானிடம் வைத்துக்கொள். அனைவரோடும் வாழ்ந்து வா. மனைவியோடும், குழந்தைகளோடும், தந்தையோடும், தாயோடும் சேர்ந்து வாழ்—அவர்களுக்குப் பணிவிடை செய். உனக்கு மிகவும் அருமையானவர்களைப் போல அவர்களை நடத்தி வா. ஆனால் உனது அந்தரங்க உள்ளத்தில், அவர்கள் உனக்குச் சொந்தமானவர்களே அல்ல என்பதை அறிந்துகொள்.

‘‘ஒரு பணக்காரனின் வீட்டு வேலைக்காரி வீட்டு வேலைகளை எல்லாம் செய்து வருகிறாள். ஆனால் அவளுடைய சிந்தனைகளோ, அவள் பிறந்த ஊரிலுள்ள அவளது சொந்த வீட்டின் மீது நிலையாக நிற்கின்றன. தனது எஜமானின் குழந்தைகளைத் தன் சொந்தக் குழந்தைகள் போல வளர்த்து வருகிறாள். அவர்களைப் பற்றிப் பேசும்போது ‘எனது ராமன்’ என்றோ, ‘எனது ஹரி’ என்றோ சொல்லவும் செய்கிறாள். ஆனால் அந்தக் குழந்தைகள் தனக்குச் சொந்தமானவர்களே அல்ல என்பதை அவளது மனதிற்குள்ளே மிகமிக நன்றாகத் தெரியும்.

‘‘பெண் ஆமை தண்ணீரிலே இங்கும் அங்குமாகப் போகிறது. ஆனால் அதனுடைய சிந்தனைகள் எங்கே இருக்கின்றன என்பதை நீ சொல்ல முடியுமா? அதன் முட்டைகள் கிடக்கும் கரையிலேதான் இருக்கும். உலகத்தில் உனக்குள்ள கடமைகளைச் செய். ஆனால் உனது உள்ளத்தைக் கடவுளிடம் மட்டுமே வை.

‘‘முதலில் பகவானிடம் அன்பை வளர்க்காமல் உலக வாழ்க்கையில் நீ ஈடுபட்டால், மேலும் மேலும் அதன் சிக்கல்களில் அகப்பட்டு கொள்வாய். அதிலுள்ள ஆபத்துகளிலும் துன்பங்களிலும் நீ மூழ்கி விடுவாய். உலகப் பொருள்களைப் பற்றி நீ நினைக்கும் அளவுக்கு அவைகளின் மீதுள்ள பற்றும் உனக்கு அதிகமாகி விடும்.

‘‘முதலில் உனது கைகளின் மீது எண்ணெயைப் பூசிக்கொள். பிறகு பலாப்பழத்தை நீ பிளக்கலாம். அப்படிச் செய்யா விட்டால் உன் கைகள்மீது அதன் பாலாகிய பிசின் ஒட்டிக் கொள்ளும். முதலில் கடவுளின்மீது பக்தி என்னும் எண்ணெயைப் பெற்றுக்கொள். பிறகு உன் கைகளை உலகக் கடமைகளில் புகுத்தலாம்.

‘‘ஆனால் பகவானின்மீது இத்தகைய பக்தியைப் பெறுவதற்குத் தனிமையான இடத்தை நாடிச் செல்வது ஒருவருக்கு முற்றிலும் அவசியமாகும். பாலிலிருந்து வெண்ணெயை எடுக்க வேண்டுமானால் ஒதுக்கமான தனியிடத்தில், அது தயிராக உறையும்படி விட்டுவிட வேண்டும். அதை அளவுக்குமீறி அசைத்துக்கொண்டேயிருந்தால் பால் தயிராக உறையாது. அதற்குப் பிறகு மற்ற கடமைகளை எல்லாம் ஒருபக்கமாக ஒதுக்கி வைத்துவிட்டு, அமைதியான ஓர் இடத்தில் உட்கார்ந்து தயிர் கடைய வேண்டும். அப்போதுதான் உனக்கு வெண்ணெய் கிடைக்கும்.

''மேலும் தனிமையான இடத்திலிருந்து பகவானைப் பற்றி தியானிப்பதால் மனம் ஞானத்தையும், வைராக்கியத்தையும் அடைகிறது. ஆனால், அதே மனம் உலகப்பற்றிலே வசிக்குமானால் கீழ்நோக்கிச் சென்றுவிடும். உலகத்திலே ஒருவர் நினைப்பது 'பெண், பணம்' ஆகிய இரண்டையும் பற்றித்தான்.

''உலகம் தண்ணீர் போன்றது, மனம் பாலைப்போன்றது. பாலை நீ தண்ணீரில் ஊற்றினால் இரண்டும் ஒன்றாகக் கலந்துவிடும். அதன் பிறகு தனியாகப் பாலைப் பிரித்துப் பார்க்க முடியாது. ஆனால் பாலைத் தயிராக்கி அதைக் கடைந்து வெண்ணெயைத் திரட்டிவிடு. அதன் பிறகு அந்த வெண்ணெயை நீரில் வைத்தால் அது மிதந்துகொண்டுதான் இருக்கும். அதைப் போலவே தனிமையான இடத்தில் ஞான சாதனம் பழகி, ஞானம் பக்தி என்னும் வெண்ணெயைப் பெற்றுவிடு. அந்த வெண்ணெயை உலகமாகிய தண்ணீரிலே வைத்தாலும்கூட இரண்டும் கலக்காமலேயே இருக்கும். அப்போது வெண்ணெய் மட்டும்தான் மிதந்து கொண்டிருக்கும்.

''இதோடுகூட நீ அவசியம் விவேகமும் (ஞான விசாரணையும்) பழகி வர வேண்டும். பெண்ணும் பொன்னும் நிலையில்லாதவைகள். கடவுள் ஒருவர் மட்டுமே அழியாத மெய்ப் பொருள். பணத்தைக்கொண்டு ஒருவன் என்ன பெறுவான்? அதைக்கொண்டு உணவு, உடை, இருக்க இடம் ஆகியவைகளுக்குமேல் எதையாவது பெற்றுவிட முடியுமா? இதன் துணையால் பகவானை உன்னால் உணரவே முடியாது. ஆகையால் வாழ்க்கையின் இலட்சியம் ஒருக்காலும் பணம் என்பதே ஆகிவிடாது. இது தான் விவேகம் பழகும் முறையாகும்.

''இதை யோசித்துப் பார். பணத்திலோ ஓர் அழகான உடலிலோ என்ன இருக்கிறது? கொஞ்சம் விசாரித்துப் பார். மிக அழகிய பெண்ணின் உடல் எலும்புகளாலும், மாமிசத்தாலும், கொழுப்பாலும், மேலும் மற்ற மனதுக்குப் பிடிக்காத பொருள்களாலும்தான் ஆக்கப்பட்டிருக்கிறது என்பதை நீ உணர்ந்துதான் இருக்கிறாய். ஒரு மனிதன் எதற்காகக் கடவுளையே கைவிட்டுவிட்டு, போயும் போயும் இத்தகைய அற்பமான பொருள்களின்மீது கவனத்தைச் செலுத்த வேண்டும்? அவைகளுக்காக ஒருவன் ஏன் பகவானையே மறந்துபோக வேண்டும்?

''மிகவும் ஆவலோடு அவனைக் காணத் துடிதுடித்து அவனுக்காக அழு. நீ அவனை நிச்சயம் காண்பாய். மனைவிக்காகவும் மக்களுக்காகவும் ஜனங்கள் குடம் குடமாகக் கண்ணீர் வடிக்கிறார்களே! பணத்துக்காகக் கண்ணீர் கடலிலேயே நீச்சல் அடிக்கிறார்களே! ஆனால் இறைவனுக்காக யார் அழுகிறார்கள்? அவனைக் குறித்து உண்மையாகவே அழு.

''விஷயம் என்னவென்றால், ஒரு தாய் தனது குழந்தையிடமும், கற்புடைய மனைவி ஒருத்தி தனது கணவனிடமும், உலகப் பற்றுள்ளவன் தன்னுடைய செல்வத்தின் மீதும் பிரியம் செலுத்துவதைப் போலவே, பகவானிடம் அன்பு செலுத்த வேண்டும் என்பதுதான். இந்த மூன்றுவிதமான பிரியங்களின் சக்திகளையும், இந்த மூன்றுவிதக் கவர்ச்சிகளின் வலிமைகளையும் ஒன்றாகச் சேர்த்து, முழுமையான அளவில் கடவுளிடம் செலுத்து. அப்போது நீ அவரைக் காண்பது உறுதி.''



'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே.'

—வள்ளலார்.

நீரில் கரைந்துபோன உப்புக் கட்டியைக் கண்ணால் பார்க்க முடியாது. நாவினால் ருசித்தறியலாம்.

அதைப் போலவே உள்ளத்தின் ஆழத்தில் ஊடுருவியிருக்கும் பிரம்மத்தை வெளி இந்திரியங்களைக்கொண்டு அறிய முடியாது. தீர்க்கதரிசியாகிய கருணை நிறைந்த குருவின் உபதேசத்தால் ஏற்படும் ஞானக்கண் விழிப்பால்தான் பிரம்மத்தை அறிய முடியும்.

அந்த உபதேசமாவது—உன்னைச் சுற்றிக் காணப்படும் உலகம் நீயல்ல. நீ பிரம்மமே.

—ஆதி சங்கரர்.

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

**ஜூன் 27**

**சுவாமி சிவானந்தர்:** ''அவர் (ஸ்ரீராம கிருஷ்ணர்)' மந்திர தீட்சை தருவதென்பது சாதாரண விஷயமல்ல. அவர் (தீட்சை தந்த) உடனேயே ஆன்மிக உணர்வை எழுப்பி விடுவார். சீடரின் நாவில் அவர் சில அக்ஷரங்களை எழுதினாரானால், உடனே சீடர் தமது மார்புக்குள் எதுவோ அலைஅலையாக விம்மி எழுவதை உணர்வார். எனக்கு (தந்திர சாஸ்திர தீட்சையாகிய) அபிஷேகம் பெறுவதில் விருப்பமுள்



ளதா'' என்று வினவினர். ''எனக்குத் தெரியவில்லை'' என்றேன். ''அப்படியானால் உனக்கு அது வேண்டாம்'' என்றார். ஒருநாள் நான் காளி கோயிலுக்குப் போய் வணங்கி வரும்போது, அவர் என்னைப் பற்றி இவ்விதம் சொன்னார்: 'எந்த உன்னத சக்தியிடமிருந்தே நாம ரூபங்கள் வெளிப்படுகின்றனவோ அதுவே இவனுடைய வீடு.'*

''சம்சார விடுதலைக்காக நான் தீவிர தாபம் கொண்டு ஏங்கினேன். இந்தப் பிறவியிலேயே இறைவனை சாட்சாத்கரிக்க வெகுவாக ஆர்வமுற்றிருந்தேன்.''

**ஜூன் 28**

**சுவாமி துரியானந்தர்:** ''நாங்கள் எங்கள் கண்களாலேயே கண்டிருக்கிறோம்; எங்கள் காதுகளாலேயே கேட்டிருக்கிறோம். கடவுளநுபவத்தில் சுவாமி விவேகானந்தர் கொண்டிருந்த மகோன்னதமான உற்சாகம் எங்களை வாயடைத்துப்போக வைத்திருக்கிறது. (அவ்வளவு உற்சாகமற்ற) நாங்கள் (எங்களைக் குறித்தே நம்பிக்கை இழக்குமாறு செய்திருக்கிறது, குருமகராஜ் எங்களை எவ்வளவோ ஊக்கியும் உறுதி கூறியும்கூட.

''ஆண்டவனை அபரோக்ஷமாக அனுபவிக்காமல் (அனுபூதியில் உணராமல்) இந்தப் பிறவி வீணாகுமோ என்றே எண்ணி வந்தோம். ஆனால் கடைசியில், குருமகராஜ் கிருபையால் நல்லகாலம் வந்தது.

''சுவாமி விவேகானந்தர் பரிவ்ராஜகராக சஞ்சரித்த நாட்களைப் பற்றி—அப்போது அவர் நடத்திய பரிபூரணத் துறவற வாழ்வு பற்றி—நான் சொன்னால் நீங்கள் ஆச்சரியத்தில் ஊமைகள் ஆகிவிடுவீர்கள். அந்த காலத்தில் ஒருசமயம் அவர், தாம் 'தன்மானமின்றி காக்கையைப் போல் பிறர் வீடுகளில் மிகுந்த அச்சத்துடன் வயிற்றை நிரப்பி வருவதாக'* எனக்கு எழுதியிருந்தார்.

---

*இறைமையின் ஏதேனும் ஓர் அம்சத்திலேயே ஒவ்வொரு சீடரின் மனப்போக்கும் உள்ளாற்றலும் இயல்பாக ஈடுபடமுடியும். இந்த அம்சத்தையே சீடரானவர் அறிந்தோ அறியாமலோ தனது இலட்சியமாகக் கொண்டிருப்பார். இவ்விதமான இறைமை அம்சத்தையே பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ''வீடு'' எனக் குறிப்பிட்டிருக்கிறார் என்பது தெளிவு.

*பர்த்ருஹரியின் 'வைராக்ய சதக'த்திலிருந்து மேற்கோள்.

**ஜூன் 29**

**சுவாமி துரியானந்தர்:** 'அவன் ஒருவனே என் எல்லாமும்; வேறெவருமில்லை'— என்று நீ எண்ணி, வேறு எதையும் சார்ந்து வாழாத போது நீ சரியாக வாழ்வாய். தற்போது நீ உலகப்பொருட்களை, பணத்தை, மனிதர்களை, படிப்பை நம்பிச் சார்ந்திருக்கிறாய். மூளையில் ஒரு சிறு திருகாணி கடகடத்துவிட்டால் மகா பண்டிதர்களும்கூடப் பைத்தியமாகிறார்கள். நாம் கடவுளைச் சார்ந்து இருக்கவில்லை. நமது பணத்தையும், நமது உறவினர்களையும், நமது நண்பர்களையுமே நம்பியிருக்கிறோம். ஆனால், 'அரசே, அவன் எதுவும் இல்லாதவருக்கே பொக்கிஷம் ஆவான்' (என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறது). உனக்கும் அவனுக்கும் குறுக்கே வர எதுவுமே இல்லாதபோதுதான் நீ அவனை நேரடியாக அனுபவிக்க முடியும். ஸ்ரீகிருஷ்ணன் கோபியரின் எல்லா பந்தங்களையும் உடைத்தான். அப்படியும் அவர்களது வெட்க உணர்ச்சி மட்டும் போகவில்லை. கடைசியில் அந்த பந்தத்தையும்கூட அவன் உடைத்தான். அவன் பொருட்டு மனிதன் எதையுமே துறக்க முடியாதவனாக இருக்கிறான் என்று இறைவன் காணும்போது, அவனாகவே (ஒவ்வொன்றாக) எடுத்துக்கொள்ளத் தொடங்குகிறான். 'ஹே பிரபோ! எல்லாவற்றையும் என்னிடமிருந்து பறித்துக்கொண்டு விடு—என் உள் இதயத்தில் நான் ஒளித்து வைத்துள்ளவைகளையும்கூட!' 'பூர்ண சத்தியமில்லாத இந்த வாழ்க்கைக் கடலை நீ கடக்க வேண்டுமானால், உலகப் பொருட்களில் ஆசையை விட்டேயாக வேண்டும்.'

''அனைத்தும் ஒன்றே என்ற ஞானத்தை உன் சொந்த அனுபவமாக்கிக்கொண்டு, அதன்பிறகு உன் இஷ்டப்படி எதை வேண்டுமாயினும் செய்' என்று குருமகராஜ் சொல்வது வழக்கம். அதாவது (முதலில்) பகவானையே உன் ஆத்மாவின் ஆத்மா, உன் உயிரின் உயிர், உன் கண்ணின் கண் என்று உய்த்துணர்ந்து அவனிடம் அன்பு செலுத்து. இதைத் தவிர வேறு எதுவும் (ஆண்டவனிடம் இது வேண்டும், அது வேண்டும் என்று பிரார்த்திப்பது எல்லாம்) உண்மையான பக்தி ஆகாது. மனதில் ஓர் இம்மி அளவுக்குக்கூட ஆசை இருக்கும்வரை பராபக்தி என்பது கைகூடாது.''

(விவேகானந்தரின்) ''எனது குருநாதர்'' படிக்கப்பட்டது. அதில் 'இந்தத் தோற்றங்கள் எல்லாவற்றுக்கும் பின்னால் ஒரு ஸத்தியம் உள்ளது,.... இந்திரிய சுகங்களையெல்லாம் வெறும் பொம்மைகளாக்கிவிடுகிற அளவில்லாத ஆனந்தமாக அந்த ஏகஸத்தியமே உள்ளது என்பதில் உறுதியான நம்பிக்கைக் கொள்வதற்கு பழக்கப்பட்ட ஒருவனால், அந்த ஒன்றை அடையப் பாடுபட முடியாமல் சும்மா இருக்க இயலுமா?' என்ற பகுதியைப் படித்தவுடன் சுவாமி துரியானந்தர் சொன்னார்:

''சற்றுப் பார்! நமக்குக் கடவுள் என்பது வெறும் வாய்ப்பேச்சு விஷயமாகத்தான் இருக்கிறது. துளி தியானம், துளி ஜபம்—இது மிகவும் வறிய வாழ்க்கை. அவனுக்காகவே பசித்து இதயம் வெடிக்க வேண்டும். அதிலே அடர்ந்த வேதனை நிறைய வேண்டும். அவனின்றி உயிரே போய்விடும் போன்ற நிலையை அடைய வேண்டும். அப்போதுதான் அது (சாதனை) சரியானதாகும்.

''இறைவனிடம் பரிபூர்ண ஆத்ம நிவேதனத்துக்குச் சிறிது குறைவானாலும் பலன் தராது. அவனை (உள்ளேயிருந்து அடக்கியாளும்) அந்தர்யாமி, சர்வக்ஞன், சர்வ வியாபகன் என்கிறாய்; ஆயினும் அவனிடம் உன்னை சரணாகதி செய்து கொள்ள பயப்படுகிறாய்! 'உன் போலி பக்தியால் தெய்விக அன்னையை அறிந்து கொள்ளமுடியும் என்றா நினைக்கிறாய்? முடியாது, முடியாது. குழந்தையைத் தாஜா செய்து அதன் கையிலுள்ள மிட்டாயை வாங்கிக் கொள்வது போல, அவளிடம் செய்யமுடியாது' என்று குருமகராஜ் சொல்வார். நீ ஆண்டவனை ஏமாற்ற முடியாது. அவன் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கிறான். 'செய்வது நீயே, நானல்ல; நீதான் இயக்குபவன், நான் கருவி மாத்திரமே' என்பார் குருமகராஜ்.

'நான் பொறாமை பிடித்த கடவுள்*' கடவுளைத் தவிர வேறு எதனிடமாவது நீ ஆசை வைத்தாயாகில், அவனுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்யாவிடில், அவனை நீ அனுபவத்தில் அறிய முடியாது.''

*அதாவது பக்தன், தன்னையன்றி வேறெதனிடமும் பற்றுதல் வைப்பதை விரும்பாததால் பகவான் பொறாமை பிடித்தவனாகிறான்.



# பொன்மலையும் வெள்ளி மலையும்

கி. வா. ஜகந்நாதன்

இறைவன் தன் அடியார்களுக்கு எத்தனை எத்தனைவிதமாகக் காட்சி அளிக்கிறான்! பரா சக்தியாகிய அம்பிகையைத் தனக்குள்ளே அடக்கிக்கொண்டு தனியொருவனாகச் சில சமயங்களில் காட்சி அளிக்கிறான்.

''அவ்வுரு, தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்'' என்று புறநானூறு சொல்கிறது. உலகத்தை மீண்டும் படைக்கத் தொடங்கும் போது, முதல் படைப்புக் கடவுளாக இருக்கிறான் சிவபெருமான். எவன் சர்வ சங்காரத்தைச் செய்கிறானோ, எவன் எல்லாம் ஒடுங்கத் தான் மாத்திரம் ஒடுங்காமல் இருக்கிறானோ, அவன்தான் முதலில் மீண்டும் படைக்க வேண்டும். உள்ளே இருக்கும் அறைகளை எல்லாம் வெவ்வேறு மனிதர் பூட்டுகிறார்கள். எல்லோரும் பூட்டிக்கொண்டு வெளியில் வந்தபிறகு வாயிற் கதவைக் கடைசியாகப் பூட்டி அதன் சாவியை வைத்திருக்கிறான் ஒருவன். மறுபடியும் அந்த வீட்டையும் அறைகளையும் திறக்க வேண்டுமானால் முதலில் பூட்டின முறைப்படியே திறக்க முடியுமா? முதலில் சமையலறையைப் பூட்டினாள் ஒரு பெண். அவளே முதலில் பூட்டினவளாகையால் அவளே முதலில் திறக்கட்டும் என்று சொல்லலாமா? அவளால்தான் திறக்க முடியுமா? யார் கடைசியில் வாயிற் கதவைப் பூட்டினானோ, அவன்தான் திறக்கும்போது முதலில் வாசற்கதவைத் திறக்க வேண்டும். அதற்குப்பிறகே மற்றவர்கள் தங்கள் தங்கள் அறையைத் திறக்க முடியும்.

அதுபோல இறுதிச் சங்காரத்தை நிகழ்த்தும் பரமசிவனே முதலில் படைப்பைச் செய்ய வேண்டும்; படைப்பு முதலியவற்றை இயற்றும் மூர்த்திகளைப் படைக்க வேண்டும். தத்துவங்களையெல்லாம் சர்வ சங்கார காலத்தில் தனக்குள்ளே ஒடுக்கிக்கொண்டவன், படைப்புத் தொடங்குகையில் அவற்றை மலர விடுகிறான்.

இவ்வாறு முதற்படைப்புத் தொடங்கும் போது, அவன் தன்னையே படைத்துக் கொள்கிறான். அருவமாக இருந்த தான், அருவுருவாகிய லிங்கோற்பவமூர்த்தியாகிறான். பிறகு உருவம் பூணுகிறான். பலபல உருவங்களை எடுக்கும் அப்பெருமான் முதல்முதலாக மாதிருக்கும் பாதியனாக—அர்த்தநாரீசனாகத் தோற்றுகிறான். தன்னுள் அடக்கியிருந்த சக்தியைத் தன்னோடு ஒட்டிய ஒரு பாதியாகக் காட்டுகிறான். அதிலிருந்து மற்றப் படைப்புகள் தொடங்குகின்றன; தத்துவங்கள் விரிகின்றன. இதை ஐங்குறுநூறு என்னும் சங்க நூல் கூறுகிறது.

''நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தனமுறையே''

என்பது அதில் உள்ள பாட்டு. நீலமேனி வாலிழையாகிய அம்பிகையை ஒரு பாகத்தில் கொண்ட ஒருவனாகக் காட்டிப் பிறகு, அந்த அர்த்தநாரீச வடிவத்திலிருந்து அந்தர்மத்திய பாதலமென்னும் மூவகை உலகங்களையும் தோன்றச் செய்கிறான்.

ஆகவே இறைவன் அருவிலிருந்து அருவுருவாகி அதிலிருந்து உருவாகக் கோலம் கொள்ளும்பொழுது, முதல்முதலில் எடுக்கும் வடிவம் இந்த அர்த்தநாரீசத் திருக்கோலம். இதுவே எல்லாவற்றிலும் பழமையானதாதலின் இதை, ''தொன்மைக் கோலம்'' என்று மாணிக்க வாசகர் சொல்வார்.

''தோலும் துகிலும், குழையும் சுருள்
தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும்,
பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்
தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய்
கோத்தும்பீ''

இந்தப் பழைய கோலத்தை நினைக்கிறார் காரைக்கால் அம்மையார். இறைவன் தன் வாமபாகத்தில் பூங்கொம்பு போன்ற இறைவியை வைத்திருக்கிறான். அவன் மிகப் பழையவனானாலும் இளமை மாறாத குழகனாக இருக்கிறான். தன்னைச் சார்ந்த சித்தர்களுக்கும் யோகிகளுக்கும் நரைதிரை மூப்பில்லாத இளமையை வழங்கும் அண்ணல் இளமையெழில் ததும்புவனாக

இருப்பது வியப்பன்று. இந்த அர்த்தநாரீசக் கோலத்தை எண்ணுகிருர் அம்மையார்.

**கொம்பினை ஓர் பாகத்துக் கொண்ட குழகன்**

இப்போது அவன் வெவ்வேறுவகையாகத் தோற்றம் அளிப்பதை மனக்கண்ணுல் எண்ணிப்பார்க்கிருர். அவனுடைய திருமேனி செக்கச்செவேலென்று இருக்கும். ''சிவனெனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான்'' என்று அப்பர் பாடுவார். அந்த மேனிக்கு அவர் பவளத்தை உவமை கூறுவார். ''பவளம் போல் மேனியில்'' என்று சொல்வார். அந்த அழகிய பவளம் போன்ற மேனியைத் தியானிக்கிருர் அம்மையார்.

இறைவன் பெரிய திருவுருவத்தோடு காட்சியளிக்கிருன். அடிமுடிகாணவரிய செஞ்சோதி பிழம்பாக நின்றவன் அல்லவா? அம்மையாரின் அகக்கண்ணில் அவன் பூமிக்கும் வானத்துக்குமாக ஓங்கி உயர்ந்து ஆடாமல் அசையாமல் நிற்கிருன்; மலைபோல நிற்கிருன். முன்பு பவளம் போன்ற மேனி என்று சொன்னவர் இந்த வடிவைக்கண்டு, 'இது மலைபோல அல்லவா இருக்கிறது?' என்று எண்ணுகிருர்.

மலைகளில் சிறந்தது மேருமலை. அதில் தேவர்கள் குடியிருப்பதனுல் சுராலயம் என்ற பெயர் பெறும். சூரிய சந்திரர்கள் அதை வலமாக வருவார்கள். அது பொன்மயமானது; பொன்மலை என்று பெயர் பெறும். அதை இறைவன் கையில் வில்லாக வளைத்து வைத்துக் கொண்டதுண்டு.

மற்ருெரு மலை கயிலாயமலை. அது மிகவும் புனிதமானது. எம்பெருமான் வீற்றிருக்கும் இடமாதலின் அது மிகமிகப் புனிதமானது. அது வெள்ளிமயமான மலை.

இறைவனுடைய பெரிய வடிவத்தை அகக்கண்ணில்கண்ட அம்மையாருக்கு, 'இந்தப் பெரிய திருமேனிக்கு எதை உவமை சொல்வது?' என்ற ஆராய்ச்சி எழுகிறது. செம்பொன்மலையாகிய மேருவைத்தான் சொல்ல வேண்டும் என்று தீர்மானிக்கிருர்.

**குழகன்தன்**
**அம்பவள மேனி அதுமுன்னம்—செம்பொன்**
**அணிவரையே போலும்**

என்று பாடினுர். இறைவன் திருமேனி செம்பொன் வண்ணமுடையது என்பதை, ''பொன்னுர் மேனியனே'' என்ற சுந்தரர் திருவாக்காலும், ''பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்'' என்ற சேரமான்பெருமான் நாயனுர் திருவாக்காலும் தெரிந்து கொள்ளலாம்.

அர்த்தநாரீசனுகத் தியானித்தவர், பவள உருவனுகக்கண்டு களித்தவர், இப்போது செம்பொன்மலையாகிய மேருவைப் போலத் தோன்றக்கண்டு இன்புறுகிருர். அதோடு காட்சி நிற்கவில்லை. இறைவன் தன் திருமேனி முழுதும் வெண்ணீற்றைப் பூசிக்கொண்டு தோற்றம் அளிக்கிருன். கால் முதல் தலைவரையில் ஒரே திருநீறு. வெண்ணீறு சண்ணித்த பெரிய திருமேனியை அம்மையார் இப்போது கண்டு வியக்கிருர். சிறிது நேரத்துக்குமுன் அவர் கண்டது பொன்மலை. இப்போது ஒரே வெள்ளை வண்ணன். மேனித்தேசும் வெண்ணிறமும் ஒன்றிப் பளபளக்கிறது அந்தக்கோலம். இப்போது பார்க்க எவ்வளவு அழகாக இருக்கிறது! வெள்ளிமலை போல அல்லவா இருக்கிறது இக்கோலம்? கைலாசபதி கைலாசத்தைப்போலவே ஒளிவிடும் வெண்ணிற மலையாக நிற்கிருன். மேருவான்து இப்போது கைலாசம் ஆகிவிட்டது. திருமேனி முழுதும் வெண்பொடி அணிந்தமையால் இந்தக் காட்சி மாற்றம் உண்டாயிற்று.

**பொடி அணிந்தால், வெள்ளி**
**மணிவரையே போலும் மறித்து.**

கொம்பினை ஓர்பாகத்துக் கொண்ட குழகன், அந்தக் கொம்பை மறைத்துவிட்டுப் பவள வண்ணப் பெருமானுகக் கோலம் காட்டினுன். பிறகு பெருவடிவம்பூண்டு செம்பொன் அணிவரையாகிய மேருவைப்போலக் காட்சியளித்தான். மறுபடியும் திருமேனி முழுதும் வெண்ணீற்றைப் பூசிக்கொண்டு வெள்ளி மணிவரையே போன்ற தோற்றம் உடையவனுனுன்.

இப்படி எம்பெருமானுடைய திருக்கோலத்தில் உண்முகப் பார்வையைச் செலுத்தி, அவன் வெவ்வேறு வகையில் தன் கோலத்தைக் காட்டக் காட்ட, நாடகம் பார்ப்பதைவிட மிகுதியான இன்பத்தைப்பெற்று, வியப்பும் மகிழ்ச்சியும், மீதூர அந்தக் காட்சிகளைத் தம் அழகிய பாடலால் கோலம் செய்து காட்டுகிருர் காரைக்கால் அம்மையார்.

**கொம்பினை ஓர் பாகத்துக் கொண்ட குழகன்தன்**
**அம்பவள மேனி யதுமுன்னம்—செம்பொன்**
**அணிவரையே போலும்; பொடிஅணிந்தால்**
**மணிவரையே போலும் மறித்து. [வெள்ளி**

[பூங்கொம்புபோன்ற அம்பிகையை தன் ஒரு பாகமாகிய இடப்பகுதியில் ஏற்றுக்கொண்ட இளமையெழிலையுடைய சிவபெருமானுடைய அழகிய பவளம் போன்ற திருமேனி, முதலில் செம்பொன்னாலான அழகையுடைய மேருமலையைப்போல இருக்கும்; வெண்பொடியாகிய திருநீற்றை அணிந்து கொண்டால் மறுபடியும் அந்தத் திருமேனி அழகைப்பெற்ற வெள்ளி மலையாகிய கைலாசத்தைப்போல இருக்கும்.

கொம்பு—பூங்கொம்பு. திருமுகம், கண், திருவாய், திருக்கரம், திருவடி ஆகியவைகள் மலர்களைப்போல விளங்க ஒசிந்து மென்மையாக இருத்தலின் பூங்கொம்பு என்று அம்பிகையைச் சொன்னார். ஓர்பாகம் என்றது இடப்பாகத்தை. குழகன்—இளமையையுடையவன். மேனிஅது: அது, பகுதிப்பொருள் விகுதி, செம்பொன் வரை—மேருமலை, அணி, மணி—அழகு, பொடி—திருநீறு. வெள்ளிவரை—கைலாசம். மறித்து—மீட்கும். முதலில் மேருமலையாகத் தோற்றியது மறுபடியும் கைலாச மலையாகத் தோற்றுமாம்.]

இறைவன் வெவ்வேறுகோலம் காட்டி அடியார்களுக்கு அருள்புரிவான் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 39—ஆவது பாட்டு.



வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

**—திருக்குறள்**

பக்தியின் இலட்சணமானது, எல்லா நடவடிக்கைகளையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவதும், ஆண்டவனை மறக்கும்போது பெருந்துன்பம் கொள்வதும் ஆகும்.

**—நாரத பக்தி சூத்திரம்**

ஆசை என்பது எல்லா உயிர்களுக்கும் எக்காலத்தும் தவறாமல் பிறவிகளை உண்டாக்கும் வித்துப் போன்றதாகும்.

**—திருக்குறள்**

அன்போடு ஒருவர் இலையோ, பூவோ, பழமோ, நீரோ எதைக் கொடுத்தாலும் பக்தியுடன் அளிக்கப்படும் அக்காணிக்கையை நான் ஏற்று இன்புறுகிறேன்.

**—கீதை**

ஆண்டவன் அடியவரிடம் குருவை அனுப்பி, அவரைத் தீய மனதிடமிருந்து விடுதலை செய்ய உதவுகிறார்.

**—ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர்**

இந்த என்கையே எனக்கு பகவான், ஏன் பகவானுக்கு மேலே! அவனைத் தொட்டு பூஜிக்கும் இது உலகுக்கெல்லாம் மருந்தாகி விட்டதல்லவா?

**—ஸ்ரீ ருத்திரம்**

தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான் சுமந்த
சித்துருவாம் எம்மைத் தரிசிப்பது எந்நாளோ.

**—தாயுமானவர்**

ஆண்டவனுக்கு உகந்தவர்கள் ஏழைகளைப் போன்ற அடக்கமுள்ள செல்வர்களும், செல்வர்களைப் போன்ற பெருந்தன்மையுள்ள ஏழைகளுமே ஆவர். **—ஓர் அறிஞர்**

துவிஜர்கள் பரமாத்மாவை அக்கினியில் பூஜிக்கின்றனர். யோகிகள் தங்கள் இதயத்தில் பூஜிக்கின்றனர். அறிவின் முதிர்ச்சி பெறாதவர்கள் பிம்பங்களில் பூஜிக்கின்றனர். சமதர்சிகள் எங்கும் பூஜிக்கின்றனர். **—உத்தரகீதை**

# இரண்டு கடிதங்கள்

**கிறிஸ்தவ துறவி லாரென்ஸ்**

கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த மகான்களுள் சகோதரர் லாரென்ஸ் அவர்களுள் ஒருவர். அரிய ஆன்மிகக் கருத்துக்கள் அடங்கிய சில கடிதங்களை அவர் எழுதியிருக்கிறார். சாதகர்களுக்கு வழிகாட்டக்கூடிய அவருடைய கடிதங்களில் இரண்டு இந்த இதழில் இடம் பெறுகின்றன. இந்தக் கடிதங்களை சன்னியாசினி ஒருவருக்கு அவர் எழுதினார்.

## முதல் கடிதம் 23 மார்ச்-1689

நமது சகோதரி N... எனக்கு எழுதிய கடிதத்திற்கு, இத்துடன் பதில் எழுதி இணைத்து அனுப்பியிருக்கிறேன். தயவுசெய்து அதை அவர்களிடம் கொடுத்துவிடும்படி வேண்டுகிறேன்.

அந்த சகோதரி மிகவும் நல்ல எண்ணங்கள் நிறைந்தவராக இருந்தபோதிலும், அவர் கடவுளின் திருவருள் வருவதற்கு முன்பாகவே விரைவில் ஆன்மிக வாழ்க்கையில் முன்னேறிச் சென்றுவிட வேண்டும் என்று விரும்புகிறார். ஒரேயடியாக ஒருவர் நினைத்த மாத்திரத்திலேயே புனிதத் தன்மையைப் பெற்றுவிட முடியாது. தங்களிடம் அவரைச் சிபாரிசு செய்கிறேன். (அவருக்கு அவருடைய ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தேவையான உதவிகளைச் செய்யும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.) நாம் ஒருவருக்கொருவர் அறிவுரைகளை வழங்கி உதவி செய்துகொள்ள வேண்டும்; அதையும் காட்டிலும் சிறந்த எடுத்துக்காட்டாக வாழ்வதன் மூலம் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டும். அவ்வப்போது இடையிடையே 'அந்த சகோதரி மிகவும் ஆன்மிக வாழ்க்கையில் ஊக்கமும், கடவுளின் திருவுள்ளத்தின்படி பணிந்து நடக்கும் ஒரே மனமும் கொண்டவராக இருக்கிறாரா?' என்பவைகளை எனக்குத் தெரிவிக்கும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பிற்குரிய அம்மா!

இந்த வாழ்க்கையில் நமக்குள்ள ஒரே ஒரு தொழில் ஆண்டவனை மகிழ்விப்பது மாத்திரமே என்பதையும், அந்த ஒரே ஒருதொழிலைத் தவிர மற்றவைகள் அனைத்துமே வீணான மூடத்தனமும் தற்பெருமையுமாகும் என்பதையும் நாம் அடிக்கடி நினைத்துக் கொள்வோமாக.

நீங்களும் நானும் நாற்பதாண்டுகளுக்கும் மேலாக மத வாழ்க்கையில் கழித்திருக்கிறோம். தமது கருணையால் நம்மை அழைத்து, நாம் (இப்போதுள்ள மத வாழ்க்கையில் ஈடுபடும்) இந்த நிலையை அடையும்படியும், இறுதியில் அடைய வேண்டிய ஆத்ம ஞானம் என்னும் இலட்சியத்திற்காகவும் நம்மை நியமித்துள்ளவர் பகவானே ஆவார். அத்தகைய பகவானிடம் அன்பு செலுத்துவதிலும் அவருக்குத் தொண்டு செய்வதிலும், நாம் இந்த நாற்பதாண்டு காலத்தை உபயோகித்திருக்கிறோமா?

தமது மகத்தான கிருபையால், பகவான் எனக்கு இதுவரையிலும் அருளியுள்ள மிகப் பெரிய நன்மைகளையும், இன்னும் இப்போதும் அவர் தொடர்ந்து வழங்கி வரும் நன்மைகளையும் ஒரு பக்கம் சிந்தித்துப் பார்த்துவிட்டு, அதோடு மறுபக்கம் நான் அவர் அளித்தவைகளை எல்லாம் சரியாகப் பயன்படுத்தாமல் பாழ்படுத்தி வந்திருப்பதையும், ஆத்ம பரிபூரண தன்மையை அடைவதில் மிகச் சிறிதளவுக்கு மட்டுமே முன்னேறியிருப்பதையும், நான் திரும்பவும் சிந்தித்துப் பார்க்கும்போது, எனது உள்ளத்தில் வெட்கமும் மனக்குழப்பமும் (என் மேலேயே எனக்கு வெறுப்பும்) நிறைகிறது.

தமது கிருபையால் அவர் இன்னமும் ஒரு சிறிது ஆயுட்காலத்தை நமக்குக் கொடுத்திருக்கிறார். ஆகவே நாம் (இந்த சொற்ப காலத்தைப் பயன்படுத்திக் கடவுளை அடையும் வகையில்) சிரத்தையோடு நமது காரியங்களைத் தொடங்குவோமாக; வீணாக இழந்து போன காலத்திற்கு ஈடு செய்வோமாக; நம்மைப் பேரன்பு பொங்க ஏற்றுக் கொள்வதற்கு எப்போதுமே தயாராகக் காத்திருக்கும் கருணைக் கடலாகிய நமது பிதாவிடமே, பரிபூரண நம்பிக்கையோடும் மீண்டும் திரும்பிச் சென்று விடுவோமாக.

அன்புள்ள அம்மா, நாம் அவர்மீது கொள்ளும் அன்பு காரணமாக (பக்திக்குக் குறைபாடு வராமல் இருப்பதற்காக) நாம் அவர் சம்பந்தப் படாதவைகளை, அவருக்குப் புறம்பாக உள்ள எல்லாவற்றையும் துறந்து விடுவோமாக. இப்படிப்பட்ட எவ்வளவு பெரிய துறவுகளை நாம் மேற்கொண்டாலும், அவைகள் எல்லாமே நாம் அவரிடமிருந்து பெற்றுள்ள கிருபைக்குப் போதுமானதல்ல. அவர் எண்ணற்ற எல்லையில்லாத தியாகத்தையும் நம்மிடமிருந்து பெறக்கூடிய தகுதிகளை உடையவர்.

நாம் இடைவிடாமல் சதாசர்வ காலமும் எப்போதும் அவரையே நினைத்துக் கொண்டிருப்போமாக. நாம் அவரிடமே நமது நம்பிக்கை முழுவதையும் வைத்திருப்போமாக. இவ்விதம் செய்வதால் அவருடைய கருணை வெள்ளமானது, ஏராளமான அளவில் பொங்கிப்பெருகி வந்து நம்மை வந்தடைவதை வெகு விரைவிலேயே உணர்ந்து கொள்வோம்; அவரது கிருபையைப் பெறுவதால் (கடினமானது என்று ஒன்றுமே கிடையாது) எல்லாவிதமான காரியங்களையும் நம்மால் செய்து சாதிக்கமுடியும்; அவருடைய திருவருளாகிய அது இல்லாமல் போய்விடுமானல், நாம் பாவத்தைத் தவிர வேறு ஒன்றுமே செய்யமாட்டோம் — இவைகளில் எனக்குச் சந்தேகமே இல்லை.

உண்மையானதும் இடைவிடாமல் தொடர்ந்தும் வருவதாகிய ஆண்டவனின் உதவி இல்லாமல், நமது வாழ்க்கையில் எராளமாக மலிந்து கிடக்கும் ஆபத்துக்களை நம்மால் தவிர்க்க முடியாது. ஆகவே அத்தகைய ஆபத்துக்களைத் தவிர்ப்பதற்காக, ஆண்டவனை நோக்கி எப்போதும் இடைவிடாமல் பிரார்த்தனை செய்வோமாக.

நாம் கடவுளுடன் இல்லாமல் போனல், அவரிடம் நாம் எப்படி பிரார்த்தனை செய்ய முடியும்? அடிக்கடியும் அவரைப்பற்றி நினைக்காமல் போனல், நாம் எப்படி அவரோடு இருக்க முடியும்? அவரைக் குறித்து அடிக்கடியும் நினைக்கும் தூய பழக்கத்தை நாமே உண்டாக்கிக் கொள்ளாமல், நம்மால் எப்படி அவரைப் பற்றி அடிக்கடி நினைக்க முடியும்?

நான் எப்போதும் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வதாக நீங்கள் என்னிடம் சொல்வீர்கள். ஆம், கடவுளை எப்போதும் நினைக்க வேண்டும் என்பதையே நான் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறேன் என்று நீங்கள் சொல்வது உண்மைதான். இதைவிட மேலானதும் சுலபமானதுமாகிய வேறு எந்த வழியும் எனக்குத் தெரியாது. இதைத் தவிர வேறு ஒரு வழியையும் நான் பின்பற்ற வில்லையாதலால், அந்த வழியையே நான் ஒவ்வொருவரையும் பின்பற்றும்படி ஆலோசனை கூறுகிறேன்.

கடவுளிடம் பக்தி செலுத்துவதற்கு முன்பு அவரை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அவரைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு, நாம் அடிக்கடியும் அவரை நினைத்தாக வேண்டும். அவரிடம் நமக்கு பக்தி தோன்றும்போது, நாம் அடிக்கடி அவரை நினைப்பவர்களாக இருப்போம். ஏனென்ருல் அப்போது நமது இதயம் நமது பொக்கிஷம் (கடவுள்) உள்ள இடத்திலேயே இருக்கும். இதைப்பற்றி சற்று நன்ருக ஆழ்ந்த கவனத்துடன் சிந்தித்துப் பாருங்கள்.

தங்கள் பணிவுள்ள சகோதரன்

லாரென்ஸ்.

## இரண்டாவது கடிதம்

வணக்கத்திற்குரிய அம்மாவுக்கு,

என்னுடைய பிரார்த்தனைகளுக்குரிய சக்தி மிகமிக அற்பமானது. என்ருலும் உங்களுடைய நன்மைக்காக அவைகளை நான் எப்போதும் செய்து வருவேன். நான் உங்களுக்காகப் பிரார்த்திப்பதாக வாக்குக் கொடுத்தேன். அவ்விதம் சொல்லியபடியே செய்தும் வருவேன்.

நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள (அனுபூதியாகிய) செல்வத்தை அடைந்தால் மட்டுமே, நாம் பாக்கியசாலிகள் ஆவோம். இந்த உலகில் அந்த ஒரே ஒரு செல்வத்தைத் தவிர, மற்றவைகள் எல்லாமே பயனற்றவைகளாகத் தோன்றுகின்றன. அந்தச் செல்வம் எல்லையற்று விரிந்து பரந்து அளவிற்கே உட்படாததாக இருந்து கொண்டிருக்கிறது. அதை அடைவதற்காக நாம் பாடுபடும் அளவிற்கேற்ப, மேலும் மேலும் பாக்கியங்களை நாம் அடைகிருேம். ஆகவே இதை உணர்ந்து நாம் எப்போதும் அதை அடைவதற்காகவே முழு மனதுடன், அந்த செல்வத்தை அடையும் வரையிலும் பாடுபட்டு உழைத்து வருவோமாக.

நான் அடையப்போகிற நிலை என்ன என்று எனக்குத் தெரியாது. தூங்கும்போதும் நான் ஆத்ம சாந்தியுடன் இருக்கிறேன். ஆத்ம சாந்தியும் மன அமைதியும் எனக்குள் வந்து கோயில் கொண்டிருப்பதைப் போலத்தோன்றுகிறது.

இந்த ஆத்மசாந்தி இல்லாமல் போகுமானால், அதுவே எனக்குப் பெரிய துன்பமாகி விடும். இத்தகைய மன அமைதி மட்டும் என்னை விட்டு நீங்காமல் இருந்தால், நரகத் துன்பத்தையும் திருப்தியுடன் நான் ஏற்றுக் கொள்வேன். இந்த ஆத்மசாந்தி மட்டும் எனக்கிருந்தால் நரகத் துன்பமும்கூட எனக்கு ஆறுதல் தருவதாகவே இருக்கும்.

பகவான் என்னைக் குறித்து என்ன நினைக்கிறார்? அவர் என்னை இந்த உலகில் எந்தக் காரியத்தை முன்னிட்டு வைத்திருக்கிறார்?— என்பது எனக்குத் தெரியாது. நான் மிகுந்த ஆத்மசாந்தியுடன் இருப்பதால், எதைக் குறித்துமே எனக்குப் பயம் என்பதே கிடையாது.

நான் அவருடன் இருந்துவரும்போது, எதற்காக நான் பயப்பட வேண்டும்? அவருடைய தெய்விக சன்னிதானத்தில், என்னால் அதிகபட்சம் இயன்ற அளவிற்கு எனது காலத்தை நான் கழித்து வருகிறேன்.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் அவரையே போற்றிப் புகழட்டும். ஆமென்.

உங்கள் சகோதரன்
லாரென்ஸ்.



சிறுவர் பகுதி: நபிகள் நாயகம்

# கடவுள் காப்பாற்றுவார்!

**விவேகானந்த தாசன்**

உண்மை பக்தர்கள், ஆண்டவனால் எப்போதும் எல்லாக் காலங்களிலும் காத்து இரட்சிக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு நேரும் சோதனைகள் கூட அவர்களுடைய பெருமையை விளக்குவனவாகவே அமைகின்றன.

தோள் வலிமை, பணத்தின் வலிமை, ஆள் வலிமை, அதிகாரத்தின் வலிமை ஆகியவைகளில் உலகப்பற்றுள்ளவர்களுக்கு அபாரமான நம்பிக்கை உண்டு. உண்மை பக்தர்களோ கடவுளிடம் மட்டுமே நம்பிக்கை கொண்டவர்களாக இருப்பார்கள். அப்படிக் கடவுளிடம் கொள்ளும் நம்பிக்கைதான் உண்மையான வலிமையாகும். ஏனென்றால் அந்த வலிமை எல்லாக் காலங்களிலும் நமக்குத் துணை புரியும். மற்ற இலௌகிகத் துணைகள் எப்போதும் நம்மைக் காப்பாற்றக் கூடியவைகளாக இருக்க மாட்டாது.

ஒருசமயம் நபிகள்நாயகம் அவர்கள், ஒரு மரத்தின் நிழலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அந்த வழியாக அவருடைய பகைவன் ஒருவன் குதிரையின்மேல் வந்து கொண்டிருந்தான்.

பகைவன், நபிகள் நாயகம் தனிமையில் படுத்துத் தூங்குவதைக் கவனித்தான். உடனே துணையில்லாமல் தூங்கிக்கொண்டிருக்கும் அவரைக் கொன்றுவிட முடிவு செய்தான். வேகமாக வாளை உருவி அவரைக் கொல்வதற்கு நெருங்கினான். அப்போது நபிகள்நாயகம் தூக்கம் கலைந்து விழித்துக் கொண்டுவிட்டார்.

அவர் தூக்கம் கலைந்து விழித்துக்கொண்டாலும் பகைவன் அஞ்சிப் பின் வாங்கவில்லை. வாள் தனது கையில் இருக்கிறது என்ற ஆணவத்துடன், ''ஏ முகமதே! இதோ பார் கத்தி என் கையில் இருக்கிறது. சிறிது நேரத்தில் நான் உன்னைக் கொன்றுவிடப் போகிறேன்! இந்த நிலையில் **உன்னை யார் காப்பாற்றப் போகிறார்கள்? இப்போது உன்னுடைய உயிர் யாருடைய கையில் இருக்கிறது''?** என்று அட்டகாசமாகக் கேட்டான்.

நபிகள்நாயகம் பதற்றம் அடையவில்லை. கடவுளை நம்பியே வாழ்ந்து பழகிய அவர், **''அல்லா என்னைக் காப்பாற்றுவார். என்னுடைய உயிர் அல்லாவின் கையில் இருக்கிறது''** என்று கூறினார். அவரது குரலில் அமைதியும் ஒருவித உறுதியும் தொனித்தன.

கத்திமுனையில் இருந்தபோதும், அஞ்சாமல் அவரது குரலில் தொனித்த தெளிவு, பகைவனை நடுநடுங்கச் செய்தது. அந்த நிலையில் பயந்துபோய் அவன் வாளைக் கீழே நழுவவிட்டு விட்டான்.

உடனே கீழே விழுந்த வாளை நபிகள் தமது கையில் எடுத்துக் கொண்டார்கள். இப்போது வாள் நபிகள் கைக்கு மாறிவிட்டது! வாளைப் பகைவனுக்கு நேராகப் பிடித்து நபிகள், ''நண்பரே, இப்போது உங்களை யார் காப்பாற்றுவார்கள்? இப்போது உங்களுடைய உயிர் யாருடைய கையில் இருக்கிறது?'' என்று அமைதியாகக் கேட்டார்.

ஏற்கனவே பயந்து போயிருந்த பகைவன், வாளைப் பிடித்துக்கொண்டே நபிகள் இப்படிக் கேட்டதும் மேலும் பயந்து விட்டான். நடுங்கிக்கொண்டே அவன், **''என்னை இப்போது யாருமே காப்பாற்றமாட்டார்கள். என்னுடைய உயிர் இப்போது தங்கள் கையில் இருக்கிறது''** என்று சொன்னான்.

அதைக் கேட்ட நபிகள் பெருமான் அருள் ததும்பும் குரலில், ''இல்லை நண்பரே! எல்லாம் வல்ல ஆண்டவனே உங்களையும் இப்போது காப்பாற்றுவார்'' என்று சொல்லிக்கொண்டே தமது கையிலிருந்த வாளைப் பகைவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். பிற்காலத்தில அந்தப் பகைவன், நபிகள் நாயகத்தின் தலை சிறந்த பக்தர்களில் ஒருவன் ஆனான்.

உண்மைப் பக்தர்கள் இன்பத்திலும் துன்பத்திலும் கடவுளுடைய செயலையே காண்கிறார்கள். பகைவனுக்கும் அருள்புரியும் விரிந்த நெஞ்சம் அவர்களுடையது.



## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

சில குழப்பங்களைத் தவிர்ப்பதற்காக இந்த மாதம் மே (வைகாசி) முதற்கொண்டு உங்களுடைய சந்தா எண்ணை மாற்றிப் புதிய சந்தா எண் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போது கொடுத்துள்ள இந்தப் புதிய சந்தா எண் வழக்கத்திற்குத் தொடரும்—ஆசிரியர்.

# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

257. இயற்கையின் இந்த (கர்ம) விதி தயவு தாட்சண்ணியம் இல்லாதது என்பது நமக்குத் தெரிவதில்லை. மேலும் நாம் படுகிற துன்பங்களுக்கு நேர்முகமாகவோ பிரத்யட்சமாகவோ, காரணம் எதையும் நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே நம்முடைய சாதாரண அறிவைக்கொண்டு அந்தத் துன்பங்களுக்குக் காரணம் கண்டு சொல்ல நம்மால் முடிவதில்லை.

ஆகவே விதி என்ற ஒன்றின்மீதோ அல்லது கண்ணுக்குப் புலப்படாத ஏதோ அதிருஷ்ட சக்தியின்மீதோ அல்லது கடவுளின்மீதோ நாம் எல்லா பழியையும் சுமத்தி விடுகிறோம். கடவுள் கொடுமைக்காரர், பாரபட்சம் மிகுந்தவர் என்றும் கருதுகிறோம். நாம் மோகத்தால் போர்த்தப்பட்டிருப்பதால் ஒருகணமும்கூட சரியாக நினைத்துப் பார்ப்பதில்லை. நமது சொந்த செய்கைகளின் பலன்களையேதான், பின்விளைவுகளையேதான்-ஒருவேளை கூட்டுவட்டியுடன் சேர்த்து-நாம் பெற்று அனுபவிக்கிறோம் என்று நாம் நினைப்பதில்லை.

ஆகவே இப்படிப்பட்ட பலன்களையும் பின்விளைவுகளையும் எண்ணி எண்ணிப் பார்த்து நமது செயல்கள், சிந்தனைகள் ஆகிய எல்லாவற்றையும் அடக்கிவைத்து, அவைகளைச் சரியான பாதையிலே வழிகாட்டிச் செலுத்தி வர வேண்டும். ஏதோ தாற்காலிகமான இன்பத்திற்காகவோ, லாபத்துக்காகவோ யாருக்கும் துன்பமோ தீமையோ ஏற்பட நாம் காரணமாக இருக்கக்கூடாது.

ஆன்மிகச் சாதனை நெறியை நாம் வழுவாமல் பின்பற்றி வந்தால், கீதையில் சொல்லப்பட்டுள்ள தெய்விக சம்பத்துகள் (தெய்விக இயல்புகள்) நமக்கு உரிமையாக வந்து சேர்ந்துவிடும். மனம் பரிசுத்தம் அடையும். நமது இதயத் தாமரையின் உள்ளேயே தெய்வ சக்தி செயல்படுவதை நாம் கண்டு உணர்ந்து கொள்வோம்.

அப்போது தவறு செய்யலாம்போல நமக்குத் தோன்றினாலும்கூட, நம்மால் தவறு செய்யவே முடியாமல் போய்விடும். ''அந்த நிலையில் (வாழ்க்கையில்) தவறாக ஓர் அடியையும் ஒருவன் எடுத்து வைக்க முடியாமல் போவான். அதுவே ஆன்மிக வாழ்க்கையில் உயர்ந்து, நிறை நிலையில் நிலைத்தவனுடைய லட்சணமாகும்'' என்று குருதேவர் ஸ்ரீராம கிருஷ்ணர் கூறுவது வழக்கம். இதை அவர் தமது வாழ்க்கையிலேயே சொல்லுக்குச் சொல் மெய்ப்பித்தும் காட்டினார்.

258. யோக சாதனம் பழகாமலோ, ஞான மார்க்கத்தைப் பின்பற்றாமலோ சமாதி கிடைக்காது என்று பலர் நினைக்கிறார்கள். பதஞ்சலின் யோக தரிசனம் கூறுவதாவது: ''மந்திர ஜபத்தின் மூலமாக தெய்வத்தின் தரிசனம் கிட்டுகிறது. அதாவது புண்ணிய நாம உச்சாரணத்தின் மூலம் இஷ்டமூர்த்தியின் சேர்க்கை ஏற்படுகிறது'' என்று சொல்கிறது.

மேலும், அது, ''ஈசுவரனுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதால் சமாதி அடையப்படுகிறது'' என்றும் சொல்கிறது. வேறொரு இடத்தில், ''அல்லது ஈச்வரத் தியானம் செய்வதன் மூலமும் அடையப்படுகிறது'' என்று கூறுகிறது.

ஆகவே பகவானிடம் மனதை ஒருமைப்படுத்தி நிறுத்துவதாலும், அல்லது பகவானிடம் எல்லா செயல்களையும், அவைகளின் பலன்களையும் சமர்ப்பணம் செய்து விடுவதாலும் சமாதி நிலையைப் பெறமுடியும் என்பதாகிறது.

மேலும் பாஷ்யகாரரான வியாசதேவர் இது சம்பந்தமாக, ''விசேஷ அன்புடனும் பக்தியுடனும் கூடிய ஈச்வரத் தியானத்தால் மகிழும் பகவான், தமது இச்சையால் மட்டுமேகூட பக்தனுக்கு அனுக்கிரகம் அருள்கிறார். பகவானுடைய இச்சையால் மட்டுமேகூட, அதாவது எந்தவிதமான நிபந்தனையும் இல்லாமலேயே, யோகிகள் மிக விரைவிலேயே சமாதியையும் அதன் பலனையும் சம்பாதித்துக் கொள்கிறார்கள்'' என்று எழுதியிருக்கிறார். இதனால் அஷ்டாங்க யோகம் பழகாமலேயேகூட, சமாதி நிலையைப் பெறலாம் என்று ஆகிறது.

உருவக் கடவுளாகிய ஈச்வரனிடம் தன்மயமாகிவிடுவதும் அருவமான பிரம்மத்தில் சமாதி அடைவதும்—இரண்டும் ஒன்றே ஆகும். இந்த இரண்டினுள் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான மனப்போக்கும், வழிமுறையும் மட்டுமே வெவ்வேறானவைகளாகும். இரண்டினுடைய வஸ்து லாபமும் பயனும் ஒன்றே ஆகும். உண்மையில் நிர்க்குணப் பிரம்மம் எதுவோ, அதுவே தான் சகுண பிரம்மமும் ஆகும். ஆனால் சகுண பிரம்மத்தை வழிபடுவது ஜீவர்களுக்குச் சுலபமானது. ஏனென்றால் அவர்களிடம் தேகபுத்தி யிருக்கிறது.



# ஸ்ரீராமக்ருஷ்ண கர்ணாம்ருதம்

## ஸ்ரீ பாலபட்டர் அருளியது

*உரையாசிரியர்:* அண்ணா என். சுப்ரமண்யம்

### 11, பகவத் குணங்கள் பரிபூர்ணமாக விளங்கும் இடம்

एकत्र वीर्य-मितरत्र यश: परत्र
ज्ञानं विरक्ति-रपत्र कुतश्चन श्री: ।
ऐश्वर्य-मन्यत्र इमे न मिथो मिलन्ति
कुत्रापि चेह तु भगास्सकला मिलन्ति ॥ ११ ॥

ஏகத்ர வீர்ய—மிதரத்ர யஶ: பரத்ர
ஜ்ஞானம் விரக்தி—ரபத்ர குதஶ்சன ஸ்ரீ: |
ஐஸ்வர்ய—மன்த்ர இமே ந மிதோ மிலந்தி
குத்ராபி சேஹ து பகாஸ்ஸகலா மிலந்தி ॥ ॥ *11* ॥

பதவுரை:—(ஏகத்ர) ஒரு இடத்தில் (வீர்யம்) வீரியம் (இதரத்) இன்னொரு இடத்தில் (யஶ:) புகழ் (பரத்ர) மற்றோரிடத்தில் (ஜ்ஞானம்) ஞானம் (அபரத்ர) வேறிடத்தில் (விரக்தி:) வைராக்கியம் (குதஶ்ன) எங்கோ ஓரிடத்தில் (ஸ்ரீ:) திரு (அன்யத்ர) மற்றும் ஓரிடத்தில் (ஐஸ்வர்யம்) ஐசுவரியம் அல்லது ஆளும் சக்தி. (இமே) இவை (குத்ர அபி)எவ்விடத்திலும் (மிதி:) ஒன்ருகக்கூடி (நமிலந்தி) இணைந்து விளங்குவதில்லை. (இஹது) இங்கு ராமகிருஷ்ணரிடத்திலோ எனின் (பகா:) பகவத்குணங்கள் (ஸகலா:) அனைத்தும்(மிலந்தி) இணைந்து விளங்குகின்றன.

*11.* ஒரு இடத்தில் வீரியம், இன்னொரு இடத்தில் புகழ், மற்றோரிடத்தில் ஞானம், வேறிடத்தில் வைராக்கியம், எங்கோ ஓரிடத்தில் திரு, மற்றும் ஓரிடத்தில் ஐசுவரியம் அல்லது ஆளும் சக்தி; இவை எந்த இடத்திலும் ஒன்ருகக்கூடி இணைந்து விளங்குவதில்லை. இங்கு ராம கிருஷ்ணரிடத்திலோ எனின், பகவத் குணங்கள் அனைத்தும் இணைந்து விளங்குகின்றன.

ஒப்பிடுக:—ஐஸ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய தர்மஸ்ய யரஶஸ: ஸ்ரீப: | ஜ்ஞான — வைராக்ய யோஶ்சைவ ஷண்ணாம் பசு இதீரணா ॥ விஷ்ணுபுராணம் 6–5–74.

### 12. எல்லாம் இனியது

हे रामकृष्ण मधुरं तव सच्चरित्रं
त्वत्पुण्यनाम मधुरं मधुरं त्वदंगम् ।
संभाषणं च मधुरं मधुरंच गानं
तत्किं नु यन्न मधुरं भवति त्वदीयम् ॥ १२ ॥

ஹே ராமக்ருஷ்ண மதுரம் தவ ஸச்சரித்ரம்
த்வத் புண்யநாம மதுரம் மதுரம் த்வதங்கம் |
ஸம்பாஷணஞ்ச மதுரம் மதுரஞ்ச கானம்
தத்கிம் நு யந்ந மதுரம் பவதி த்வதீயம் ॥ *12* ॥

பதவுரை:—(ஹே ராமக்ருஷ்ண) ஸ்ரீராமகிருஷ்ணப் பெருமானே! (தவ) உம்முடைய (ஸச்சரித்ரம்) சீரிய சரித்திரம் (மதுரம்) இனியது; (த்வத்) உம்முடைய (புண்யநாம) புண்ணிய நாமம் (மதுரம்) இனியது; (த்வத்) உம்முடைய (அங்கம்) உருவம் (மதுரம்) இனியது; (ஸம் பாஷணஞ் ச) சம்பாஷணையும் (மதுரம்) இனியது; (கானஞ்ச) ஸங்கீதமும் (மதுரம்) இனியது. (த்வதீயம்) உம்முடையது (தத் கிம் நு) எதுதான் (யந்ந மதுரம் பவதி) இனிமையற்றதாக உள்ளது?

*12.* ஸ்ரீ ராமகிருஷ்ணப் பெருமானே! உம்முடைய சீரிய சரித்திரம் இனியது. உம் முடைய புண்ணிய நாமம் இனியது. உம்முடைய உருவம் இனியது. உரையாடலும் இனியது. சங்கீதமும் இனியது. உம்முடையது எதுதான் இனிமை இல்லாததாக இருக்கிறது?



# தெய்வத்தாய் மதாலஸா

பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

வெகு காலத்திற்கு முன்பு பேரரசர் ஒருவர் இருந்தார். ஒரு நாட்டைச் சிறப்பாக ஆட்சி செய்வதற்கு வேண்டிய தகுதிகளைவிடவும் அதிகமான அளவில் திறமைகள் அவரிடம் குடி கொண்டிருந்தன. அதோடு அந்த அரசருக்கு ஆன்மிக வாழ்க்கையிலும் அபரிமிதமான ஈடுபாடு இருந்தது.

அரசர் கருத்தூன்றி ராஜபரிபாலன காரியங்களைக் கவனித்தார். எஞ்சியபொழுதை எல்லாம் அவர், மகரிஷிகள் காட்டிய வழியைப் பின்பற்றி தவ வாழ்க்கை வாழ்ந்தார். பெரும்பொழுதை அவர் தவத்தில் கழிப்பது வழக்கம். பிரம்மத்தைக்குறித்த சிந்தனையிலேயே வாழ்ந்த அவர், நாளடைவில் பிரம்மத்தை அனுபூதியில் உணர்ந்த பிரம்ம ஞானியும் ஆனார்.

மரம் பழுத்தால் வௌவால்கள் தாமாக பழுத்த மரத்தை நாடி வருவதைப் போலவும், மலர்ந்த மலர்களை நாடி தேனீக்கள் வருவதைப் போலவும், பிரம்மஞானம் எய்தியிருந்த அரசரை நாடிப் பல உண்மையான முமுட்சுக்கள் வந்தார்கள். அஞ்ஞான இருளைக் கிழித்தெறிந்த அரசர், தம்மை நாடியவர்களுக்கு எல்லாம் பிரம்மத்தை அனுபூதியில் உணர்ந்து பிறவிக் கடலைக் கடக்கும் வழியைக் காட்டினார். அவருடைய ஞானமொழிகளைக் கேட்டுப் பயனடைந்த முமுட்சுகள், பிரம்ம சாட்சாத்காரத்தைப் பெறுவதற்கான வாழ்க்கையில் ஈடுபட்டனர். அவர்களுள் பேரரசரின் திருமகள் இளவரசி மதாலஸாவும் ஒருத்தியாக இருந்தாள்.

தனக்குத் தந்தையாகவும் பிரம்மத்தை உணர்ந்த குருவாகவும் விளங்கிய அரசரைப் பின்பற்றி, மதாலஸாவும் தவ வாழ்க்கை வாழ்ந்தாள். காலக்கிரமத்தில் அவளும் மெய்யுணர்வு எய்திய மகான்களின் நிலையை அடைந்தாள். அவளது உள்ளம் முழுவதும் பரிபூரணமான அளவில் பரப்பிரம்மத்திலேயே ஆழ்ந்திருந்தது.

பொதுவாக மக்கள் வாழும் நாமமும் ரூபமும் நிறைந்த பொய் உலக நினைவுகளைக்கடந்து வாழ்ந்தாள் மதாலஸா. உலகம் என்ற ஒன்று இருப்பதையோ, தனக்கு ஓர் உடல் இருப்பதையோ அவள் உணரவில்லை. எங்கும் எதிலும் பிரம்மமே அவளது காட்சிக்குப் புலனாயிற்று. பிரம்மம் சத்தியம், ஜகத் மித்தை என்ற உயர்ந்த வேதாந்த உண்மை மதாலஸாவின் சுய அனுபவமாக விளங்கியது. 'தான் உடலோ, மனமோ, புத்தியோ, அகங்காரமோ அல்ல; எல்லையில்லாத, நித்தியமான, ஜோதிமயமான பிரம்மமே தனது உண்மை சொரூபம்' என்பதை அனுபவ பூர்வமாக உணர்ந்து அவள் வாழ்ந்து வந்தாள்.

இந்த நிலையில் இளவரசி மதாலஸாவுக்கும் அண்டை நாட்டைச் சேர்ந்த ரிதத்வஜன் என்னும் அரசனுக்கும் திருமணம் நடந்தது. தனது கணவராகிய அரசரிடம், மதாலஸா ஒரே ஒரு வரம் தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். தனக்குப் பிறக்கும் குழந்தைகளைத் தனது விருப்பப்படியே வளர்ப்பதற்கு அரசர் அனுமதி தரவேண்டும் என்பதுதான் அவள் கோரிய அந்த வரம். ரிதத்வஜ மன்னனும் மதாலஸாவின் விருப்பத்திற்கு இசைந்து வரம் தந்தான்.

சிறிது காலம் கடந்தது. மதாலஸாவிற்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. ரிதத்வஜ மன்னன் அந்தக் குழந்தைக்கு விக்ராந்தன் என்ற பெயரைச் சூட்டினான். தனது கணவன் வைத்த பெயரைக் கேட்ட மதாலஸா சிரித்தாள். ரிதத்வஜ மன்னனோ, குழந்தைக்கு வைத்த பெயரைக் கேட்டவுடன் தனது மனைவி சிரிப்பதற்கான காரணம் புரியாமல் திகைத்தான்.

பிரம்மானந்தத்தில் தோய்ந்த உள்ளத்துடன் தனிமையான இடத்தில் குழந்தையுடன் மதாலஸா இருப்பது வழக்கம். அப்போதுகுழந்தையை மடிமீது அமர்த்தி அவள், ''நீ நிரஞ்ஜனன் (மாசுமறுவற்றவன்) ஆவாய்'' என்று சொல்லிப் பாடுவாள். அகமுகப்பட்ட தெய்விக நிலையிலேயே வாழ்ந்த மதாலஸா, குழந்தைக்காகப் பாடிய பாட்டுகளெல்லாமே உயர்ந்த வேதாந்த உண்மைகளைப் புகட்டுவதாகவே அமைந்திருந்தன.

குழந்தைக்கு சிசுப் பருவம் கடந்தது. பரிபூரண சாந்தியிலும் பிரம்மானந்தப் பேரின்பத்திலும் ஆழ்ந்தபடியே மதாலஸா, குழந்தையை தொட்டிலிட்டு, ''நீ நிரஞ்ஜனன் ஆவாய்'' என்று சொல்லிப் பாடிக்கொண்டே தொட்டிலை ஆட்டுவாள்.

குழந்தை வளர்ந்து வந்தான். அப்போதும் அவன், தனது தாயின் வாயிலிருந்து சதாசர்வ காலமும் 'நீ நிரஞ்ஜனன் ஆவாய்' என்னும் மொழிகளே ஒலிப்பதைக் கேட்டுவந்தான்.

சிறுவன் எந்தக் காரணத்தை முன்னிட்டாவது அழுதால், மதாலஸா சொல்வாள்:-''என் கண்மணி, நீ ஏன் அழுகிறுய்? ஒருவேளை நீ அழவில்லைபோலும், அழுகைக் குரல் உனது உடலிலிருந்து வருவதையே நான் கேட்கிறேன் போலும். மகனே, நீ உடல் அல்லவே அல்ல. உடலுக்கு நீ உரியவன் அல்ல; உனக்கும் உடல் உரியதல்ல. உடல் என்பது ஒரு சட்டையைப் போன்றதே தவிர வேறு ஒரு சிறப்புமே அதற்கு இல்லையப்பா! உடலுக்குரிய குணங்களும் தொழில்களும் உன்னை ஒருபோதுமே பற்ருது மகனே! உடல் வளரலாம், தேயலாம்; ஆனுல் அவை உனக்கு இல்லை செல்வமே! தாய், தந்தை, உற்றம், சுற்றம் என்று சொல்லப்படும் அனைவருமே நிலையில்லாதவர்கள். உனது வாழ்க்கையிலே அவர்களுக்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவத்தை எப்போதும் கொடுத்து விடாதே. இலௌகிக இன்பங்களை நுகர்ந்து துன்பங்களை நீக்க முயற்சிப்பவர்கள் முழுமூடர். இன்ப துன்பங்களைப் பொருட்படுத்தாமல், நித்தியமாக விளங்கும் பிரம்மத்திலேயே நீ நிலைத்திருப்பாயாக!''

இவ்விதம் தனது மகனுக்கு அவனுடைய இயல்பாகிய ஆத்மசொரூபத்தைப் பற்றியே மதாலஸா எடுத்துச் சொன்னுள். மனதையும் உடலையும் கடந்த ஆத்மசொரூபமே அவனுடைய நிலையானதும் உண்மையானதுமாகிய சுய இருப்பிடம் என்பதை எல்லாம் தெளிவாக எடுத்துச் சொல்லி, அத்தகைய கருத்துக்களைப் பிள்ளையின் நெஞ்சிலே பசுமையாக இடம் பெறும்படி செய்தாள்.

அற்புதமான தாய் அவள். தெய்வத் தாய் அவள். தாயே நீ வாழி, வாழி!

தனது மகனுக்கு இலௌகிகக் கதைகளை எடுத்துச்சொல்லி, அவனைப் பந்தத்திற்கு ஆளாக்கி அஞ்ஞான காரிருளிலே எண்ணற்ற பிறவிதோறும் உழன்றுப் பொடிபடச் செய்திடாமல், ''நீ நிரஞ்ஜனன்! உலக நிகழ்ச்சிகளால் உன்னை எள்ளளவும் தொடமுடியாது மகனே! ஆத்ம சொரூபமே நீ! உனது ஆத்ம சொரூபத்தில் நிலைத்து நிற்பாய் செல்வமே!

''பிறப்பும் இறப்பும் உனக்கில்லை. தாயும் தந்தையும் உனக்கில்லை. மறைவும் மாற்றமும் உனக்கில்லை. அழியாத ஆன்மா நீ! தெய்விக மானவன் நீ! உனது தெய்விக சொரூபத்திலேயே நிலைத்து நிற்பாய், கண்மணி!'' என்பதைப் போன்ற வேதாந்த உண்மைகளை எல்லாம், மதாலஸா தனது சொத்தாக தன் மகனுக்குத் தந்தாள். உண்மையான ஒரே சொத்து அதுதானே!

விக்ராந்தன் வளர்ந்தான். அதோடு தான் ஆத்ம சொரூபமே என்ற கருத்தும் அவனிடம் வளர்ந்தோங்கி உறுதிப்பட்டது. இளைஞனுகிய போது 'பிரம்மம் ஒன்றே ஒன்றுதான் மெய்ப்பொருள்' என்னும் தெளிந்த அறிவு உறுதிப்பட்டுவிட்டதால், பற்றும் பாசமும் மிகுந்த உலக வாழ்க்கையைத் துறந்தான். இளமைப் பருவத்திலேயே சன்னியாசத்தை மேற்கொண்டு தவம் புரிவதற்காக அரண்மனையை விட்டு காட்டுக்குச் சென்றுவிட்டான். மிக விரைவிலேயே பிரம்மத்தை உணர்ந்த பிரம்ம ஞானியும் ஆனுன்.

இதற்கிடையில் மதாலஸா மற்ருெரு ஆண் குழந்தைக்குத் தாயானுள். ரிதத்வஜ மன்னன் இரண்டாவதாகப் பிறந்த குழந்தைக்கு சுபாகு என்று பெயர் சூட்டினுன். அரசன் பெயர் வைத்தபோது மதாலஸா மீண்டும் சிரித்தாள். இந்த முறையும் மனைவியின் செய்கைக்கான காரணம் ரிதத்வஜனுக்குப் புரியவில்லை.

தனது முதல் குழந்தையை வளர்த்த அதே விதத்தில் சுபாகுவையும் மதாலஸா வளர்த்தாள். 'நீ நிரஞ்ஜனன். அழியாத ஆன்மாவே நீ. பரிசுத்தமே உனது சொரூபம்' என்பதைப் போன்ற வேதாந்தக் கருத்துகளையே பாடல்களாகப் பாடி குழந்தையைத் தொட்டிலிட்டு ஆட்டினுள். தனது சொல், செயல், சிந்தனைகளால் பிரம்மமயமாகவே இருந்த மதாலஸா, அதையே குழந்தையின் உள்ளத்தில் கோயில் கொள்ளச் செய்தாள். ஆகவே வளர்ந்து இளைஞனுகியபோது, சுபாகுவும் துறவறம் பூண்டு தவ

வாழ்க்கையை நாடி காடு சென்றான். விரைவில் பிரம்மசாட்சாத்காரம் பெற்ற பிரம்மஞானி ஆனான்.

மதாலஸாவுக்கு மூன்றாவதாக ஆண் குழந்தை பிறந்தது. மன்னன் குழந்தைக்கு **சத்துருமர்த்தனன்** என்ற பெயரைச் சூட்டினான். இந்த முறையும் குழந்தைக்கு பெயர் சூட்டிய வுடனேயே மதாலஸா சிரித்தாள். மன்ன னுக்கு அரசியின் போக்கு புரியவே இல்லை.

வழக்கப்படி தனது இரண்டு மக்களை வளர்த்த விதத்திலேயே சத்துருமர்த்தனையும் மதாலஸா வளர்த்தாள். ''**நீ நிரஞ்ஜனாகவே இருக்கிறாய்.** பரிபூரண சச்சிதானந்த சொரூபமே நீ'' என்று சொல்லி தாலாட்டினாள். சத்துருமர்த்தனன் வளர வளர உயர்ந்த ஆத்ம தத்துவங்களை அவ னுக்குப் புகட்டி வந்தாள். அவனும் சிறு வயதி லேயே உலக வாழ்க்கையைத் துறந்து காடு சென்றான். தியான வாழ்க்கையில் ஈடுபட்டு பிரம்மஞானம் எய்தினான்.

ரிதத்வஜ மன்னர் மிகவும் நல்லவர். தமது மனைவி மதாலஸா ஆன்மிக வாழ்க்கையில் அபா ரமான பிடிப்புள்ளவளாக இருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைபவராகவும் அவர் இருந்தார். ஆனால், பிறக்கும் ஒவ்வொரு குழந்தையையும் மதாலஸா வளர்த்தவிதம், அவருக்குத் துன் பத்தைத் தருவதாக இருந்தது. தனக்குப் பிறந்த மூன்று குழந்தைகளுமே அரசுரிமை ஏற்று நாடாள முன்வரவில்லையே என்பதுதான் அவரது துன்பத்திற்குக் காரணம். தமது வம் சம் பூண்டற்றுப்போய்விடுமோ என்ற அச்சம் அவரை வருத்தியது. 'தனக்குப் பிறக்கும் இள வரசனுக்கு மன்னனாக முடிசூட்டிவிட்டு, அர சாளும் பொறுப்பை அவனிடம் ஒப்படைக்க வேண்டும். அந்தக் கடமை முடிந்ததும் தனது மனைவி மதாலஸாவுடன் காடு சென்று தவ வாழ்க்கையில் எஞ்சிய காலத்தைக் கழிக்கவேண் டும்' என்றெல்லாம் அரசர் நினைத்திருந்தார். ஆனால் மதாலஸாவின் செய்கைகள் அவர் நினைத்தது ஒன்றுமே நடைபெற வழியில்லாமல் செய்துவிட்டன. தமக்குப் பிறகு 'யார் இந்த நாட்டை ஆட்சி செய்ய போகிறார்கள்?' என்ற சிந்தனை அவரை வெகுவாக வருத்திக் கொண்டி ருந்தது.

இந்த நிலையில் மதாலஸாவுக்கு நான்காவ தாக ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

முன்பு பிறந்த மூன்று குழந்தைகளுக்கும் தாம் பெயர் வைத்ததும், பெயரைச் சூட்டிய வுடனே அரசி சிரித்ததும் அரசருடைய நினை வுக்கு வந்தன. ஆகவே அவர் மனைவியிடம், ''மதாலஸா, இந்தமுறை நமது செல்வத்துக்கு நீயே பெயர் வை'' என்று கேட்டுக் கொண் டார்.

அதற்கு மதாலஸா சம்மதித்து குழந்தைக்கு **அலர்க்கன்** என்ற பெயரைச்சூட்டினாள். 'அலர்க் கன்' என்ற சொல்லுக்குப் பைத்தியம் பிடித்த நாய் என்பது அர்த்தம். ஆகவே மனைவி குழந் தைக்குச் சூட்டியப் பெயரைக் கேட்டதுமே அரசர் அதிர்ச்சியடைந்தார். அதிருப்தியை மன திற்குள்ளாகவே அவரால் அடக்கிக் கொள்ள வும் முடியவில்லை. ஆகவே மன்னர் பெருமான் அரசியிடம், ''தேவி! கொஞ்சம்கூட பொருத்த மில்லாத பெயரை இளவரசனுக்குச் சூட்டு கிறாயே, இதற்கு என்னதான் காரணம்?'' என்று வெளிப்படையாகவே கேட்டு விட்டார்.

பரிபூரண சாந்தியும் தெய்விகமுமே வடி வெடுத்தவளாகத் திகழ்ந்தவள் மதாலஸா. ஒரு தேவதையைப் போல மண்ணுலகில் வாழ்ந்த அமைதியின் சொரூபமானஅவள், தமது கண வராகிய பேரரசரின் முகத்தை ஏறிட்டு நோக்கி னாள். மன்னனின் முகத்தையே சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளு டைய அந்தப் பார்வையிலே ஒரு தெளிவும், உறுதியும் பிரத்தியட்சமாக துலங்கி ஒளிவிட்டு பிரகாசித்தன. மௌனமாக சிறிதுநேரம் மன் னனையே உற்று நோக்கிய பிறகு மதாலஸா பேசினாள். வார்த்தைகளை அளந்து பேசுவதைப் போல அமைதியுடன் அவளது குரல் ஒலித்தது. ''மன்னர்பெருமானே! தாங்கள் மற்ற குழந் தைகளுக்கு வைத்த பெயர்களைக் கொஞ்சம் நினைத்துப் பார்க்க வேண்டுகிறேன். அந்தப் பெயர்களும்கூட சற்றும் பொருத்தமில்லாமல் **உண்மைக்குப்** புறம்பாகத்தானே இருந்தன? 'விக்ராந்தன்' என்று பெயர் வைத்தீர்கள். அதற்கு 'இடம்விட்டு இடம் பெயர்பவன்' என்றுதானே அர்த்தம்? ஆத்மாவானது எங் கும் பரந்து நிறைந்திருப்பதல்லவா? ஆத்மா வுக்குப் போக்கு உண்டா? வரவு உண்டா? எங் கும் பரந்த ஆத்மா இடம்விட்டு இடம் எங்கே போகும்? எங்கே வரும்?

''சுபாகு'' என்று பெயர் வைத்தீர்களே, 'வலிமை படைத்த தோள்களைக் கொண்ட

வன்' என்பதுதானே அதனுடைய பொருள்? ஆத்மாவிற்கு உருவமே இல்லாதபோது, அதற்கென்று தோள்கள்தான் ஏது?

''சத்துருமர்த்தனன்'' என்றால் 'பகைவர்களை வெல்பவன்' என்பது பொருள். பல இடங்களிலும் விளங்குவது ஒரே ஒரு ஆத்மாதானே? அப்படியிருக்கும்போது அந்த ஆத்மாவிற்கு பகை என்றும், நட்பு என்றும் ஏதாவது இருக்கிறதா? அல்லது இருக்கத்தான் முடியுமா?

''ஆகவே நீங்கள் வைத்த எல்லாப் பெயர்களுமே கொஞ்சம்கூட பொருத்தமோ உண்மையோ கொண்டவைகளாக இல்லையே! மேலும் உண்மையைச் சொல்வதென்றால், ஒரு வழக்கத்தையொட்டித்தானே குழந்தைகளுக்கு இந்த உலகில் பெயர்களை வைக்கிறார்கள்? ஆத்மாவிற்குப் பெயர்கள் உண்டா? பொருத்தமில்லாத பெயர்களையே வைப்பது உலக வழக்கமாக இருப்பதால், நானும் 'அலர்க்கன்' என்று பெயர் வைத்தேன். இதில் என்ன தவறு இருக்கிறது?'' என்று மதாலஸா வெகு சாந்தமாகவும் தெளிவான குரலிலும் சொல்லி முடித்தாள்.

ஆன்மிக வாழ்க்கையின் பெருமையைத் தெளிவாக உணர்ந்தவர் ரிதத்வஜ மன்னர். ஆகவே மதாலஸா சொன்ன கருத்தை மறுத்துப்பேச வழியில்லாமல், ''நீ சொன்னவை அத்தனையும் உண்மை'' என்று சொல்லி ஒப்புக் கொண்டார்.

என்றாலும் அரசர் 'இனியும் தமக்குக் குழந்தைகள் பிறக்கப் போகிறார்களா?' என்ற கவலையில் ஆழ்ந்தார். ஆகவே பெரும் துயரம் உள்ளத்தை அழுத்த மதாலஸாவிடம் அவர் சொன்னார்:— ''தேவி, உனது விருப்பப்படியே குழந்தைகளை வளர்த்துக் கொள்ள நான் சம்மதித்திருப்பது உண்மைதான். ஆனாலும் உன்னிடம் இப்போது ஒரே ஒரு வரம் வேண்டி யாசிக்கிறேன். முதல் மூன்று குழந்தைகளையும் நிவிருத்தி மார்க்கத்திலேயே நீ வளர்த்தாய். அதன் காரணமாக அவர்கள் சன்னியாசிகளாகி விட்டார்கள். உலக வாழ்க்கைக்குப் பயன்படவோ அரசாட்சியை மேற்கொள்ளவோ இயலாதவர்களாகி விட்டார்கள்.

''இப்போது பிறந்துள்ள நான்காவது குழந்தைக்கு நீ நிவிருத்தி மார்க்கத்தை போதிக்காமல் இருக்கவேண்டும் என்பதுதான் நான் வேண்டிக் கேட்கும் வரம். அவனை பிரவர்த்தி மார்க்கத்திலேயே வளரும்படி விட்டு விடு. இல்லற வாழ்க்கையின் தர்மங்களையும் அரசனாக அமர்ந்து நாடாளுவதற்கு வேண்டிய திறமைகளையும் அறிவுரைகளையும் அவனைப் பெற்றிருக்கும்படி செய்.''

மதாலஸா தனக்குப் பிறந்த நான்காவது குழந்தைக்கும் ஆத்ம தத்துவங்களைப் புகட்டி நிவிருத்தி மார்க்கத்தில் செலுத்தத்தான் மனப்பூர்வமாக விரும்பினாள். 'நீ நிரஞ்ஜனனாகவே இருக்கிறாய்' என்று சொல்லி மகனை வளர்ப்பது தான் தனது கடமை என்பதையும் அவள் உணர்ந்திருந்தாள்.

ஆனால் தழுதழுத்த குரலில், உள்ளம் கரைந்து அரசர் வேண்டிக் கேட்டுக்கொண்ட வரத்தை அவளால் புறக்கணிக்க முடியவில்லை. அரசரின் நிலையைக்கண்டு இரங்கிய அவள், கணவர் கோரிய வரத்தைக் கொடுத்தாள்.

அலர்க்கனுக்கு பிரம்ம சாட்சாத்காரத்தை நாடும் நிவிருத்தி மார்க்கத்தைப் புகட்டாமல், பிரவிருத்தி மார்க்கத்தைப் புகட்டினாள் மதாலஸா. பிரவிருத்தி தர்மத்தின்படியே உலக வாழ்க்கையையும் நாடாளும் பொறுப்பையும் திறம்பட வெற்றிகரமாக நடத்தும் வகையில், தனது வழக்கத்திற்கும் மாறாக மைந்தனை அவள் வளர்த்து வந்தாள். அதன்படியே பல கலைகளையும் அரசிளங்குமரன் கற்றுத் தேர்ந்தான்.

புறத்தளவில் மகனுக்கு பிரவிருத்தி நெறிக்கு வேண்டிய பயிற்சிகளை மதாலஸா கொடுத்து வந்தாள். ஆனால் அவள் உள்ளம் மட்டும் எங்கும் எதிலும் ஆத்மாவையே காணும் பண்பை ஒருபோதும் இழக்கவில்லை. மகனை எப்போதும் மாசுமறுவற்ற நிரஞ்ஜனன் என்றே அவள் கண்டாள். அவள் மைந்தனிடம் பேசியபோதும், பழகியபோதும், அவனைக் குறித்த சிந்தனைகள் உள்ளத்தில் எழுந்தபோதும் அவனை ஆத்ம சொரூபம் என்றே கருதினாள். நித்தியமாய் உள்ள ஆத்மா என்ற கருத்துடனேயே மகனை அவள் பார்த்தாள். அந்த நினைவுடனேயே அவனுக்கு வேண்டிய தேவைகளைச் செய்து கொடுத்தாள்.

புறத்தளவில் அலர்க்கன் உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஓர் இளவரசனாக வளர்ந்து வந்தான்.

ஆனால் மதாலஸா தனது உள்ளத்தளவில் மகனை அழியாத ஆத்மா என்று கருதி வந்தது வீண் போகவில்லை. அவளது சிந்தனைகள் அலர்க்கனின் நெஞ்சில் புகுந்து, அவனது உள்ளத்தில் உறுதி வாய்ந்த ஒரு ஞானக் கோட்டையைக் கொஞ்சம் கொஞ்சமாக கட்ட ஆரம்பித்தன. மௌனமாகவும் பிறர் கண்ணுக்குப் புலப்படாமலும் நடந்து வந்த இந்த அற்புதத்தைத் தாயோ, மகனோ, மற்றவர்களோ உணரவில்லை.

தான் கொடுத்த வாக்குறுதிப்படியே ஆத்ம தத்துவத்தின் சாயலும் இல்லாத பயிற்சிகளையே அலர்க்கனுக்கு மதாலஸா கொடுத்து வந்தாள். மன்னர் விரும்பியபடியே அலர்க்கன் பெரும் சாம்ராஜ்யத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு வேண்டிய தகுதிகளைப் பெற்றவன் ஆனான்.

பிரவிருத்தி எனப்படும் உலக வாழ்க்கைக்கு வேண்டிய அரிய குணநலன்களை ஏராளமாக அலர்க்கன் பெற்று விளங்கியதைக் கண்ட அரசர் மனம் மகிழ்ந்தார். மக்களைப் பரிபாலிக்கும் நாடாளும் மன்னனுக்கு உரிய திறமைகளை அலர்க்கன் பெற்றபோது, அவனுக்கு முடிசூட்டி விட்டு மனைவியுடன் காடு சென்று தவ வாழ்க்கையில் ஈடுபட ரிதத்வஜ மன்னன் விரும்பினான். அதன்படியே பேரரசனும் பட்டமகிஷி மதாலஸாவும் நாடுவிட்டு காடு செல்ல ஆயத்தமானார்கள்.

மதாலஸா கணவனுடன் அரண்மனையை விட்டு புறப்படும் தருணம் நெருங்கியது. அரண்மனையை விட்டு வெளியேறயிருந்த கடைசி நிமிடத்தில் மதாலஸா அலர்க்கனைத் தனிமையில் அழைத்து, ''இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஒருவனுக்கு பலவிதமான பற்றுக்கள் இருக்கும். அதன் காரணமாக பெரும் துன்பங்களை அவன் வாழ்க்கையில் சந்திக்க நேருவதும் இயல்பு. மகனே! உலக கடமைகளை நீ செய்து வரும்போது, எப்போதாவது வாழ்க்கை உனக்குத் தாங்கமுடியாத துன்பமாகத் தோன்றினால், நான் இப்போது உனது விரலில் அணியும் இந்த மோதிரத்தைக் கழற்றி, அதனுள்ளே மறைவாக நான் வைத்துள்ள சிறிய காகிதச் சுருளை எடுத்துப் படித்துப்பார். அதனால் உனக்கு நன்மை ஏற்படும்'' என்று சொல்லி மகனை ஆசிர்வதித்தாள். பின்பு மதாலஸா கணவனுடன் காட்டை அடைந்தாள்.

உறுதியும் உழைப்பும் மிகுந்த அலர்க்கன் திறம்பட செங்கோலோச்சினான். மக்கள் நலனையும் நீதியையும் நேர்மையையும் கண்ணெனபாவித்து அரசாண்டான். ஓர் அரசருக்குரிய கடமைகளிலிருந்து ஒருசிறிதும் வழுவாமல் அவனது அரசாட்சி நடைபெற்றது. மதாலஸாவிடம் பயிற்சி பெற்றவன் அல்லவா? ஊரும் உலகமும் அலர்க்கனின் ஆட்சியை வாயாரப் புகழ்ந்து பாராட்டின.

**சி**றிது காலம் உருண்டோடியது. உலகின் நிலையாமையைப் பற்றிய சிந்தனைகள் அலர்க்கனின் உள்ளத்தில் நிழலாடின. உலக வாழ்க்கையில் பெறும் வெற்றிகளும் சிறப்புகளும் அலர்க்கனுக்கு மனநிறைவைத் தரவில்லை. 'வாழ்க்கையில் அனுபவிக்கப்படும் எல்லாமே குறைபாடுகளைக் கொண்டவை; நிலையானதாக எதுவுமே இல்லை' என்று அவன் சிந்திக்கத் தொடங்கினான். அந்த சிந்தனைகள் விஸ்வரூபம் எடுத்தபோது, வாழ்க்கையே அவனுக்கு அலுத்தது. அரச வாழ்க்கை கசந்தது. வாழ்க்கை அவனுக்குப் பொறுக்க முடியாத பாரம் போன்று தோன்றி உள்ளத்தை வாட்டியது.

அப்போது, தனது தாய் விடைபெற்றுப் பிரிந்து சென்றபோது கூறிய வாசகங்கள் அவனது நினைவுக்கு வந்தன. மதாலஸா குறிப்பிட்ட காலம் நெருங்கி விட்டது என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது. உடனே தாய் தனது விரலில் அணிவித்துச் சென்ற மோதிரத்தைக் கழற்றி, அதை திருப்பித் திருப்பிப் பார்த்தான். மோதிரத்தின் பிரகாசம் நெருப்பைக் கக்குவதைப்போல அவனுக்குப் பட்டது. பல ஆண்டுகளுக்கு முன்பு அரண்மனையை விட்டுப் பிரிந்து சென்ற தாய், மோதிரத்தின் வடிவிலிருந்து தன்னை அன்பும் பாசமும் பொங்க உற்று உற்று நோக்குவதைப்போல அலர்க்கனுக்குப் பட்டது. அன்னையின் அன்பும் அருளும் ததும்பும் முகம் அவன் நினைவுக்கு வந்தது. மோதிரத்தைத் திறந்து அதனுள்ளே சுருட்டி வைக்கப்பட்டிருந்த காகிதத்தை எடுத்து உற்றுப் பார்த்தான். ஆம், அதில் ஓர் ஆச்சரியம் அவனுக்காகக் காத்திருந்தது. ''த்வம் அசி நிரஞ்ஜன'' **நீ நிரஞ்ஜனனாக இருக்கிறாய்**—என்ற வாசகம் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

அதை அலர்க்கன் பார்த்ததுதான் தாமதம், மின்னல்வெட்டுப்போன்று 'பளிர் பளிர்' என்று

பலவித சிந்தனைகள் அவனது உள்ளத்தில் பூகம் பம் வெடித்ததைப் போல அடுக்கடுக்காக ஒன் றன்பின் ஒன்ருகத் தோன்றின. இதுவரை வாழ் நாளெல்லாம் கேட்டும், பழகியும் வந்த கருத் துக்களுக்கும், சின்னஞ்சிறிய காகிதம் சொன்ன கருத்துக்கும்தான் எத்தனை எத்தனை பெரிய வேறுபாடு! புதுமையான ஒரு தெய்விக உல கத்திற்குள் தனது மனம் புகுந்து புகுந்து செல் வதைப்போல அலர்க்கன் உணர்ந்தான். வார்த் தையில் வடிக்கமுடியாத, அளவிட முடியாத புனிதம் ததும்பும் ஓர் ஆனந்தம் அவனது உள் ளத்தில் ஊற்றெடுத்துப் பொங்கியது. தெய் விகக் கவர்ச்சியும், ஈடு இணையற்ற அழகும் ததும் பும் புத்தம் புதிய கருத்து தனது உள்ளத்தில் முகிழ்ந்து எழுந்ததைத் தெளிவாக அலர்க்கன் உணர்ந்தான். **'நீ நிரஞ்ஜனஞக இருக்கிருய்'** என்று படித்த மாத்திரத்திலேயே அந்தக் கருத்து விஸ்வரூபத்தைப் பெற்று, திடீரென்று அவ னது உள்ளத்தில், ஆத்மாவின் தெய்விக தரி சனத்தைத் தோற்றுவித்தது. ஜோதிமயமான ஆத்மாவின் தரிசனத்தை அப்போது அவனது உள்ளம் உணர்ந்துவிட்டது. பிரகாசமும் குளு மையும் நிறைந்த ஆத்மா எனப்படும் சச்சிதா னந்தத்தின் தரிசனம்தான் அது!

அலர்க்கன் பிறந்தபோதே, ஆத்ம தரிச னத்தை பெறும்வகையில் அவனை வளர்க்கவே நினைத்தவள் மதாலஸா. அந்த தரிசனம், காகி தச் சுருளை அலர்க்கன் படித்துப் பார்த்தவுட னேயே வெளிப்பட வேண்டும் என்பதற்காகவே இதுவரையிலும் அலர்க்கனின் இதயக்குகை யிலே மறைந்திருந்து காத்திருந்தது போலும்!

உள்ளத்தில் ஒளிவிடும் ஆத்மாவின் பிர காசத்தை உணர்ந்த மாத்திரத்திலேயே புதிய மனிதனுகி விட்டதைப்போல், அலர்க்கனின் வாழ்க்கையில் புத்தம் புதியதோர் அத்தியாயம் துவங்கியது. அஞ்ஞானத்தின் திரை தவிடு பொடியாக ஆரம்பித்து விட்டதல்லவா? உலக வாழ்க்கையின் பொருளற்றதும் சாரமற்றது மாகிய உண்மை இயல்பு உள்ளங்கை நெல்லிக் கனியைப்போல அவனுக்குப் புலப்பட்டது. 'அனைத்துக்கும் உறைவிடமும் அனைத்துமாய் தோன்றிக்கொண்டிருப்பதாகிய ஆத்மாவே தான்' என்ற என்றும் உள்ள ஒரே உண்மை அவனுக்கு விளங்கிவிட்டது.

உடனே அலர்க்கன் பொய்முகமூடியணிந்த மாயை வாழ்க்கையிலிருந்து விடுபட்டு விலகி விட உறுதி கொண்டான். தனது அண்ணன் மார்களைப் பின்பற்றி மாயை சூழ்ந்த அற்ப உலக வாழ்க்கையைத் துறந்தான். துறவு பூண்டு காடு சென்று தனியிடத்தில் அமர்ந்து கடும் தவம் இயற்றினுன். மதாலஸா பெற்ற மகனு யிற்றே! அவனது தவமா வீண் போகும்? அலர்க் கன், தான் **'நிரஞ்ஜனன்'** என்பதை அனுபூதியில் உணர்ந்த பிரம்மஞானியானுன்.

பிரம்ம பாவனையை உள்ளத்தில் தேக்கி வாழ்ந் தால் தலைசிறந்த ஆன்மிக வாழ்க்கையை வாழ லாம் என்பதை மதாலஸாவின் ஞானவாழ்க்கை விளக்குகிறது. ஒருவர் உண்மையாகவே பிரம்ம பாவனையையே குழந்தைகளிடமும் கொண் டால், குழந்தைகளும் எப்படிப்பட்ட உயர்ந்த நிலையை அடைவார்கள் என்பதை மதாலஸா வின் வாழ்க்கையை மையமாகக் கொண்டு, எவ் வளவு அழகாகத்தான் மார்க்கண்டேய புரா ணம் எடுத்துக் காட்டுகிறது!



எவனிடமிருந்து உலகம் துன்புறுவதில்லையோ, எவன் உலகத்திடமிருந்து துன்புறுவ தில்லையோ, எவன் மகிழ்ச்சி, சினம், அச்சம், மனக்கிளர்ச்சி இவைகளிலிருந்து விடுபட்டவனே அவனே எனக்குப் பிரியமானவன்.

**—கீதை 12–15.**

புத்தி, சக்தி, சாந்தம், சிரத்தை, தயை, திருப்தி, தாய் வடிவமாக எந்தத் தேவி எல்லா உயிர்களிடமும் குடிகொண்டிருக்கிருளோ அவளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம்.

**—தேவி மஹாத்மியம்.**

கோபத்தை அடக்குகின்றவனும், குற்றம் செய்பவர்களை அடக்குகின்றவனும் பாக்கிய சாலிகள்.

**—முகமது நபி.**

# நமது விவேகானந்தர்

என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார்
முன்னாள் உயர்நீதி மன்ற நீதிபதி

மக்கள் எத்தனைவிதமான மனப்போக்குகளைக் கொண்டவர்களாக இருக்கிறார்களோ, அத்தனை விதங்களிலும் அணுகக் கூடியவராக விவேகானந்தர் விளங்குகிறார். அவர் இந்து மதத்திற்கு ஆற்றிய தொண்டு மகத்தானது.



எத்தனை எத்தனையோ தேசிய வீரர்கள் இருந்திருக்கிறார்கள். என்றாலும் வீரம் என்றால், அது விவேகானந்தருக்குத்தான், விவேகானந்தருக்கு மட்டுமேதான் பொருந்தும் என்று சொல்வேன்.

அவரைத் தெரியாதவர்கள் யாருமே இந்துக்களாக இருக்க முடியாது.

எனக்கு வயது பத்து அல்லது பதினொன்று நடந்துகொண்டிருந்தபோது, முதன் முதலாக விவேகானந்தருடைய நூல்களைத் தமிழில் படித்து வீரமும் ஊக்கமும் பெற்றேன். நாள் தோறும் மாலை நேரத்தில் எனக்குப் பழக்கமாகியிருந்த துறவி ஒருவரின் முன்னால், விவேகானந்தருடைய கருத்துகளைப் படிப்பதை நான் வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

சென்னையில் சமீபத்தில் நடந்த ஒரு கருத்தரங்கில் பல்கலைக்கழக மாணவர்களும் மாணவிகளும் கலந்துகொண்டார்கள். அந்தக் கருத்தரங்கில் கலந்து கொண்டவர்களில் பலரும், விவேகானந்தர் பிறந்த நாட்டில் தாமும் பிறந்ததற்காகப் பெருமைப்படுவதாகக் குறிப்பிட்டார்கள். அவ்விதம் இப்போதய தலைமுறையினரும், வருங்கால மக்களும் பெருமைப்படத்தக்க வாழ்க்கையை விவேகானந்தர் வாழ்ந்தார். பிறரும் வாழ வழி வகுத்தார்.

'இந்து மதம் உலகம் முழுமைக்குமே பொதுவான சமரசக் கருத்துக்களைக் கொண்டது'— என்னும் கருத்தைப் பரந்த அளவில் உலகம் முழுமைக்கும் பறையறைந்த பெருமை எந்த ஒரு தனி மனிதருக்காகிலும் உண்டு என்று சொன்னால்—அது விவேகானந்தருக்குத்தான், விவேகானந்தர் ஒருவருக்கேதான் உண்டு என்று நிச்சயமாகச் சொல்லலாம். எத்தனை சொற்பொழிவுகள், எத்தனை எத்தனை வீரகர்ஜனைகள், முழக்கங்கள் பட்டித்தொட்டி எல்லாம் தனி ஒரு மனிதராக இருந்து தமது குறுகிய வாழ்நாளிலேயே விவேகானந்தர் ஆற்றியிருக்கிறார்! மனித குலத்தையே அவரது வாழ்க்கை வியப்பில் ஆழ்த்திக் கொண்டிருக்கிறது.

மக்களின் பரிபக்குவத்திற்கு ஏற்ற வகையில், இந்து மதம் பல உண்மைகளைப் போதித்து அவர்களை மேலான நிலைக்கு அழைத்துச் செல்கிறது. இந்த உண்மையை விவேகானந்தர் மக்களுக்கு புரியும் வகையில் எடுத்துக்காட்டித் தலைசிறந்த

முறையில் விளக்கியதைப்போல, விவேகானந்தரைத் தவிர வேறு யார் சொல்லியிருக்கிறார்கள்? சொல்ல முடியும்? இந்து மதத்தை உலக மக்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதியும் வகையில் சொன்னவர் விவேகானந்தரே ஆவார் என்று நாம் தலைநிமிர்ந்து சொல்லலாம். ஆஹா! எப்படிப்பட்ட மகான் விவேகானந்தர்!

ஆண்டவன் தமது பக்தர்களைத் தடுத்தாட்கொள்கிறார் என்று சொல்வார்கள். அதைப் போலவே நரேனை பரமஹம்ஸதேவர் தடுத்தாட்கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் நரேந்திரருக்கும் நடந்த உரையாடல்களை எப்போதும் மறவாமல் நினைவில் வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

'துறவிக்கு வேந்தனும் துரும்பு' என்ற உண்மையை விவேகானந்தருடைய வாழ்க்கையில் பரக்கக் காணலாம்.

விவேகானந்தருக்கு விழாக் கொண்டாடுகிறோம். அது மிகவும் நல்லது. ஆனால் அதே சமயத்தில் சுவாமி விவேகானந்தரை எவ்வளவு தூரம் நடைமுறை வாழ்க்கையில் நாம் பின்பற்றியிருக்கிறோம் என்று நம்மில் ஒவ்வொருவரும் நினைத்துப் பார்க்க வேண்டிய நாள், விவேகானந்தரின் ஜயந்தி நாள் என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன்.

எனது அறையில் விவேகானந்தருடைய திருவுருவப் படத்தை மாட்டியிருக்கிறேன். நாம் இந்துக்கள்கூட அல்ல. சுவாமி விவேகானந்தருடைய சீடர்கள். ஏனென்றால் சுவாமி விவேகானந்தருடைய சீடன், ஒருபோதும் மதவெறி கொண்டவனாக இருக்க மாட்டான். அவன் எல்லா மதங்களிலும் உள்ள ஆன்மிக உண்மைகளைப் பாராட்டுபவனாக இருப்பான். ஏழை எளியவர்களுக்குத் தனது நடைமுறை வாழ்க்கையில் உதவி செய்யக்கூடியவனாக இருப்பான். இன்றைய மிகப் பெரும்பாலான அரசியல்வாதிகளைப் போல இல்லாமல் உண்மையான தேச பக்தி கொண்டவனாக இருப்பான்.

விவேகானந்தருக்கு இளைஞர்களிடம் அபார மான நம்பிக்கை இருந்தது. 'நமது மதத்திற்கும் நமது நாட்டிற்கும் உழைப்பதற்காக ஒரு நூறு இளைஞர்கள் முன்வாருங்கள். இந்த உலகத்தை மாற்றி அமைக்கலாம்' என்று அவர் அழைத்தார். இதே சென்னை மாநகரத்தில். 'young men of Madras, my hope is in you' என்று சொன்னார் விவேகானந்தர். அவர் எத்தகைய நம்பிக்கைகளை எல்லாம் தமது இதயத்தில் தேக்கி வைத்து, எப்படியெல்லாம் பேசினாரோ அவைகளை ஈடேற்ற நாம் ஒவ்வொருவரும் முயற்சி செய்வோமாக.

விவேகானந்தர் காட்டிய வழியில் அவரால் தோற்றுவிக்கப்பட்ட ஸ்ரீராமகிருஷ்ண இயக்கம் உலகின் பல பாகங்களிலும் அரிய பல பணிகளை செய்து வருகிறது. அதனுடைய சிறப்பு வாய்ந்த பணிகளைப் பற்றி நாம் அனைவருமே அறிவோம். ஆதலால் அதைக் குறித்து இப்போதைக்கு நான் விளக்கமாக இங்கு பேசவில்லை. ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்தவர்கள் சன்னியாசிகள். அதுவும் சிறுபான்மையினர். அவர்கள் எவ்வளவோ பணிகளைச் செய்து வருகிறார்கள். அவர்களால் எவ்வளவு பணிகளைத்தான், எத்தனை இடங்களில்தான் செய்ய முடியும்?

விவேகானந்தர் கண்ட இலட்சியங்களை நடைமுறைப்படுத்த சிறுபான்மையோரைக் கொண்ட ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் துறவிகள் மட்டுமே போதுமா? மக்களில் பெரும்பான்மையினரும் சன்னியாசிகளாகும் வாய்ப்பைப் பெருதவர்களுமாகிய நாமும், ஸ்ரீராமகிருஷ்ண மிஷனோடு தோளோடுதோள் சேர்ந்து, விவேகானந்தரின் கருத்துகளைப் பின்பற்றவும் பரவிடச் செய்யவும் முன்வர வேண்டாமா? அது இந்த நாட்டில் பிறந்த நம் ஒவ்வொருடைய கடமை அல்லவா?

நிர்குண பிரம்மத்தைப்பற்றி பேசும் ஞான யோகத்தைப் பின்பற்றுவதற்கென்றே பிறந்தவர்கள் சன்னியாசிகள். அவர்களுக்கு அந்த மார்க்கம் முற்றிலும் சரி. ஆனால் நம் போன்ற சாதாரண மக்களும் ஆத்மா, மாயை பிரம்ம ஞானம் என்று எவ்வளவோ பேசலாம். பிறர் சொல்லக் கேட்கலாம். நாம் மாயை என்று சொல்வதால் மட்டுமே நம்மை விட்டு மாயை விலகப் போவதும் இல்லை. பிரம்மஞானம் என்று சொல்வதால் மட்டுமே நமக்குப் பிரம்மஞானம் வந்துவிடப் போவதும் இல்லை. சாதாரண மக்களாகிய நாம், விக்கிரக வழிபாட்டைக் கைக்கொண்டொழுகுவதால் மட்டுமே படிப்படியாக ஞான முன்னேற்றத்தைப் பெற முடியும். எல்லா ஆன்மிகக் கருத்துகளும் இடம் பெற்றுள்ள இந்து மதத்தின் ஒரு கருத்தாகிய விக்கிர வழி

பாட்டில் புதைந்துள்ள உண்மையை, விவேகானந்தர் வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகள் அழகாக விளக்குகின்றன. விக்கிர வழிபாட்டைக் கடைப்பிடித்து வரும் பலருக்கும் நம்பிக்கையையும் ஊக்கத்தையும் தரக்கூடிய கருத்துகள் விவேகானந்தருடைய வாழ்விலும் வாக்கிலும் நிறைந்திருக்கின்றன. விக்கிரக வழிபாட்டின் தத்துவத்தைப் புரிந்து கொள்ளாமலேயே குறை கூறியவர்களுக்கு, விவேகானந்தர் தமது ஆணித்தரமான விவாதத் திறமையைக் கொண்டு சரியான முறையில் படிப்பினையைப் புகட்டியிருக்கிறார்.

''எப்போதெல்லாம் தர்மத்திற்குக் குறைவும் அதர்மத்திற்கு எழுச்சியும் உண்டாகிறதோ, அப்போதெல்லாம் என்னை நான் படைத்துக் கொள்கிறேன்'' என்று கீதையில் சொல்லப்பட்டுள்ளது. கீதை சொல்லிய அப்படிப்பட்ட கடவுள் மனிதர்கள் வரிசையில் வந்தவர்களே பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும்.

எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் சுவாமி விவேகானந்தரைக் குறித்து நான் பேசிக்கொண்டேயிருப்பேன். எனக்கு அவரிடம் அப்படிப்பட்ட ஓர் அளவில்லாத ஈடுபாடு இருந்து கொண்டிருக்கிறது. அவரைப் பற்றிப் படிக்கப் படிக்க ஆனந்தமும் வியப்பும் மேலிடுகிறது. அவரைப் பற்றி நினைக்க நினைக்க ஆனந்தமும் வியப்பும் மேலிடுகிறது.

**மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் 16—1—77 ஞாயிறு நடைபெற்ற சுவாமி விவேகானந்தர் ஜயந்தி விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவின் ஒரு பகுதி**



# 'அம்மா எழுந்திடு! அருங்கண் திறந்திடு!'

வே. மு. மந்திரம்

*தலைமை ஆசிரியர்: ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளி (மெயின்) சென்னை*

**சுவாமி விவேகானந்தர் இந்தியத் தாயோடு உரையாடி எழுப்புவது போல அமைக்கப்பட்டுள்ளது இந்தக் கவிதை**

விவேகா னந்தரைப் புரிந்திடுவோம் யாம்
வீரம் பொங்கிடும் தெரிந்திடுவோம் யாம்
வீரம் உலகியல் வீரம் தன்னுடன்
வெறிகொள் புலன்வெலும்
வீரமென் றிரண்டாம்
வீரமிவ் விரண்டும் விவேகந் தன்னுடன்
விளங்கின இணைந்தே வீரத் துறவியாய்
துறந்தா னுலகிய லாசைக ளெனினும்
மறந்தா னில்லை மக்களி னின்னல்
அறத்தினை யழிக்கும் வறுமை கண்டான்
சிறுமை செய்யும் தீண்டாமை கண்டான்
புவியில் பாரத நாட்டினர் புழுவாய்ப்
தவிப்பதைக் கண்டுளம் தவித்தான் தவத்தோன்
ஏழைகள் படுந்துய ரெண்ணி யெண்ணி
இதயம் நைந்தான் இருகண் சொரிந்தான்

என்ற னருமை இந்திய நாடே
உன்றன் பெருமை ஒளிந்தது மெங்கே?
இந்த உலகிற் கெடுத்துக் காட்டாய்
இருந்த நீயா இந்நிலை யடைந்தாய்!
உன்றன் பாமர மக்களை மகளிரை
உதைத்துத் தள்ளினாய் உதைபட் டாய்நீ
உயர்வதற் கோர்வழி உரைப்பேன் கேளாய்
உயர்த்திடு அவர்களை, உயர்ந்திடு வாய்நீ
இருகால் ஒய்ந்தா லெப்படி நடப்பாய்?
உறுப்புக ளனைத்திலும் ஓடினால் குருதி
உறுதியும் வலிமையும் உடையன வாகும்
சக்தியின் சின்னம் பெண்க ளென்றே
சாற்றின மறைகள் ஏன்மறந் தாய்நீ?
பட்டினி தன்னிலும் பாடு படும்நல்
பாமர மக்களை ஏன்வதைத் தாய்நீ?
உழவ னன்றோ உணவிடு கின்றான்?
ஒருநாள் சுத்தம் செய்திடும் தொழிலோர்
ஒய்வெனினுன் நகர் எந்நிலை யெய்தும்?
பலதொழில் செய்யும் பாமரர் நமக்குப்
பணம்வரு வகைகள் பலசெய விலையா?
படிப்புக் கவர்பணம் பயன்பட விலையா?
படித்தவர் கூடவிப் பாமர மக்களை
அடித்தே சொல்லினா லகற்றுவ தேனோ?
பாமர மக்களும் பாரதர் அன்றோ?
ஓரவஞ் சகமும் உனக்கே னம்மா?
உன்குழந் தைகள் அல்லரோ அவர்களும்
உணர்த்திடு வாயுயர் நிலையுள் ளோர்க்கே
உளம்நை கின்றேன் உள்ளி அவரையும்
கொடுமை! கொடுமை! உனக்கடுக் கும்மோ?
கொடுமை தந்தாய்! கொடுமைப் படுகிறாய்!
அலட்சியம் செய்தாய் அப்பாவி மக்களை
அல்ல அல்லஅப் பாவம் செய்தாய்
அதனால் வீழ்ந்தாய், ஐயோ! என்றாய்
வீழச் செய்தாய்! வீழ்ந்தாய் நீயும்!
ஏறச் செய்வாய்! ஏறிடு வாய்நீ

இந்திய மக்கள் எவ்வகை யாயினும்
''என்றன் மக்கள்'' என்றுணர் வாய்நீ
உன்றன் மக்கள் எல்லோ ருக்கும்
''உயர்ந்தவ னாயினும் தாழ்ந்தவ னாயினும்
உன்றன் சோதரன்'' எனவுணர்த் திடுவாய்
எந்த நிலையில் எவனிருந் தாலும்
இந்திய னெனுமுணர் வெழுப்பி(டு) அம்மா!
துன்பம் நீங்கிட இன்பம் பொங்கிடச்
சொல்கின் றேன்சேய், கேள்நீ யம்மா
உணர்வா லொன்று பட்டால் தானே
உனக்கும் வலிமை நீமறந் தாயோ[
ஒன்றே பரம்பொருள், நன்றிதைக் காண்மின்!
என்றுல கிற்கே எடுத்தோ தினையே
எல்லா உயிரிலும் இந்தப் பரம்பொருள்
உறைகின் றானெனப் பறையறைந் தாயே
ஏனோ மறந்தாய் இதைநீ யம்மா!

(அடுத்த இதழில் முடிவு பெறும்)



# பிருந்தாவனத்தில் ஸ்ரீ சாரதா தேவியார்

சுவாமி யோகானந்தர்

தமிழாக்கம் : மணி

ஸ்ரீகுருதேவர் (ஸ்ரீராமகிருஷ்ணர்)மறைந்த பிறகு, அந்தத் துயரத்தால் மிகவும் பீடிக்கப் பட்ட நிலையிலும், தூய அன்னையார் எப்படித் தம்முடைய தெய்விக அருளையும் சாந்நித்தியத் தையும் எப்பொழுதும் அனுபவித்துக்கொண் டிருந்தார் என்பதை நாங்கள் தெளிவாகக் கண்டோம்.

இங்கே கொடுக்கப்பட்டுள்ள தூய அன்னையின் நினைவுகளைப் பல ஆண்டு களுக்கு முன்பு ஸ்ரீராமகிருஷ்ணரின் சீட ராகிய சுவாமி யோகானந்தர் எழுதினர்



பிருந்தாவனத்தில் தூய அன்னையார் பல ஆன்மிக அனுபவங்களைப் பெற்றுர். ஒருநாள் அவருடனிருந்த பெண் பக்தர்கள் அவர் ஆழ்ந்த சமாதி நிலையிலிருந்ததைக் கண்டார்கள். அவர் கள் இறைவனின் நாமத்தை ஸ்ரீஅன்னையின் காதில் ஓதி அவரது உள்ளத்தை சாதாரண நிலைக்கு இறக்க முயற்சித்தனர். நான் ஸ்ரீராம கிருஷ்ணரின் நாமத்தை, பலம் கொண்ட மட் டும் கூவினேன். அப்போது அன்னையார் சாதா ரண நிலைக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் திரும்ப ஆரம்பித்தார்.

அத்தகைய பரவச நிலையில் அவர் பேசும் பாணி, குரல், அவர் சாப்பிடும் முறை, நடக் கும் விதம், அவருடைய நடைமுறைகள் ஆகிய எல்லாமே, அப்படியே ஸ்ரீகுருதேவரைப் போலவே இருந்தன.

ஆழ்ந்த தியான நிலையில் வணங்குபவரும் வணங்கப்படுபவரும் ஒன்ருகி விடுகிருர்கள் என்று நாம் கேட்டிருக்கிறோம். சமய நூல்களும் இறைவனிடம் ஒன்றிவிடும் ததாத்மிய பாவம் என்னும் தெய்விக நிலையைப் பற்றிக் கூறுகின் றன.

கோபியர் எவ்விதம் ஸ்ரீ கிருஷ்ணருடைய பிரிவைத் தாங்கமுடியாமல், அவருடைய நினை விலேயே ஒன்றித் தங்களுடையத் தனித்தன் மையை இழந்து, தாங்களும் ஸ்ரீகிருஷ்ணரைப் போலவே நடக்கத் தலைப்பட்டார்கள் என் பதை ஸ்ரீமத் பாகவதத்தில் படித்திருக்கிறோம். அப்படியே அன்னையாரும் தம்முடைய தனித் தன்மையை அடியோடு மறந்து, ஸ்ரீகுருதேவரு டன் ஒன்றி அவரைப் போலவே நடந்து கொண் டார். அந்தச் சமாதி அனுபவங்களுக்குச் சற்றுப் பிறகு அவரிடம் நான் ஆன்மிக விஷயங்களைப் பற்றிய சில நுட்பமான கேள்விகளைக் கேட் டேன். அப்போது அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் போன்றே அந்தப் பரவச நிலையிலேயே பதில் களை அளித்தார். ஸ்ரீகுருதேவர் வழக்கமாகக் கூறும் அதேமுறையில், அவர் உபயோகிக்கும் உதாரணங்களையும் உவமைகளையும் கையாண்டு அவருடைய எளிய பாணியிலேயே பேசினர்.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய பாவத்துடன் அன்னையார் அவ்விதம் ஒன்றியிருப்பதைப் பார்த்து நாங்கள் வியப்படைந்தோம். அது ஒப்புவமை இல்லாததாக அமைந்தது. குரு தேவரும் அன்னையாரும் வெவ்வேறு உருவங் களைக் கொண்டிருந்தாலும் உண்மையில் அவர் கள் இருவரும் ஒருவரேயாவர் என்பதை அப் போது நாங்கள் உணர்ந்து கொண்டோம். ''இறைவா, நீயே புருஷன், நீயே பெண்''

என்று சாஸ்திரங்கள் கூறவில்லையா? ஸ்ரீ குரு தேவர் பலமுறை என்னிடம், தம்முடைய உட லுக்கும் ஸ்ரீஅன்னையாரின் உடலுக்கும் எந்த விதமான வேறுபாடுமே கிடையாது என்று கூறியுள்ளார்.

அந்த பாவாதீத நிலையில் அன்னையார் ஏறத் தாழ இரண்டு நாட்கள் இருந்தார். அந்த அனு பவத்திற்குப் பிறகு அன்னையாரிடம் ஒரு பெரிய மாறுதல் காணப்பட்டது. அவர் எப்போதும்



சுவாமி யோகானந்தர்

ஆனந்தப் பரவசத்தில் மூழ்கியிருந்தார். ஸ்ரீகுரு தேவருடைய பிரிவால் ஏற்பட்ட பெருந்துய ரங்களனைத்தும் அவரிடமிருந்து மறைந்தன. அதற்குப் பதிலாக சாந்தம் நிறைந்த ஆனந்த நிலையை அடைந்தவராகக் காணப்பட்டார்.

சிலசமயங்களில் அவர் கள்ளங்கபடற்ற எளிய சிறுமியைப்போல நடந்து கொண்டார். அப் போது, பிருந்தாவனத்திலிருக்கும் பல கோயில் களைக் காணப் பெரும் ஆவலைத் தெரிவிப்பார். அல்லது யமுனைத்தீரத்தில் ஸ்ரீகிருஷ்ணரும் கோபிகளும் நடத்திய தெய்விக லீலைகளுடன் தொடர்புடைய இடங்களைக் காண ஆவல் நிறைந்தவராகக் காணப்படுவார்.

அவர் அப்போது அந்தப் பரவச நிலையில் இருந்ததால், அவருக்கு ஸ்ரீகிருஷ்ணருடைய சாந்நித்தியத்தை உணர இருந்த துடிப்பும், அவர் ஸ்ரீகிருஷ்ணரின் நாமத்தை பெரும் அன்பு டன் ஓதியதும் எங்களுக்கு ஸ்ரீராதையை நினைவு படுத்தியது. ஸ்ரீஅன்னையாரின் பெண் அடியார் கள் மூலமாக அவர் தம்மையே ராதிகா தேவி யாகப் பாவித்தார் என்று நான் அறிந்தேன். இடைவிடாத தியானத்திலும் ஜபத்திலும் அவர் தமது நேரத்தைக் கழித்து, மணிக்கணக் கில் தன்னை மறந்த பரவச நிலையில் பல சமயங் கள் மூழ்கி இருந்தார். நாங்கள் அன்னையாரு டன் ஹரித்துவாரம் வரை சென்றோம். அங்கு அவருடைய மனநிலை முற்றிலும் மாறுபட்ட தாக இருந்தது. ஒரு சாதாரண யாத்திரிகரைப் போன்று கங்கைக் கரையிலிருந்த எல்லாக் கோயில்களுக்கும் சென்று பூஜை செய்து வழி படுவது அவர் வழக்கமாக இருந்தது. ஆனால் இமாலய பர்வதத்தைக் கண்டு அவர் பேச்சற்று நின்று விட்டார். அவர் பிருந்தாவனத்தையே அதிகமாக நேசித்தார். ஆகவே விரைவிலேயே அவர் அங்கு திரும்பினர். அங்கிருந்தபொழுது தூய அன்னையாரின் அருளால் நான் ஸ்ரீகிருஷ் ணருடைய தெய்விக லீலையைப் புரிந்து போற்ற அறிந்துகொண்டேன்.



நறுமணம் காற்றடிக்கும் பக்கமாகத்தான் பரவும். காற்றுக்கு எதிராக போகாது. ஆனல் நல்ல மனிதருடைய வாசனை காற்றையும் எதிர்த்து எங்கும் எல்லா இடங்களுக்கும் செல்லும்.

—புத்தர்

மாயையைத் தாண்டிச் செல்கின்றவர் யாவர் ? பற்றினை அறுப்பவர், மகா புருஷரைப் பேணுகின்றவர், மமகார உணர்ச்சியை நீக்குகின்றவர்—இவர்களே மாயையைத் தாண்டு வோர் ஆவர்.

—நாரத பக்தி சூத்திரம்

உன் முகத்தை மனிதர்களை விட்டும் திருப்பிக் கொள்ளாதே! பூமியில் பெருமையடித்துப் கொண்டும் நடக்காதே! நிச்சயமாகக் கர்வம் கொண்டு பெருமையடிக்கும் யாரையும் அல்லா நேசிப்பதில்லை.

—திருக்குர்ஆன்

# கடவுள்

சுவாமி இராமகிருஷ்ணனந்தர்
தமிழாக்கம்: ராமகிருஷ்ணன்

கடவுள் என்று அழைக்கப்படும் பரம் பொருள் எல்லா விதங்களிலும் எல்லேயற்றவர் என்பதை நாம் அறிந்திருக்கிருேம். அவர் அளவற்ற சக்தி படைத்தவர்; எல்லேயில்லாத அழகுடையவர்; நிகரற்ற உணர்ச்சிகளை உடையவர். ஆகவே இத்தகைய எல்லேயற்ற பரம் பொருளாகிய இறைவனே ஓர் எல்லேக்குள் உட்படுத்த முடியாது. இப்படிப்பட்ட இயல்புகளைக் கொண்ட இறைவன் பின்பு எப்படி ஸ்தூலமாக மனித உடலில் அவதரிக்கிருர்?

அர்ஜுனனிடம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பின்வருமாறு கூறுகிருர். ''பிறப்பற்றவனுகவும் மாறுபாடற்றவனுகவும் உண்டாயினவற்றிற்கெல்லாம் ஈசனுகவும் இருந்தும், என்னுடைய பிரகிருதியை வசப்படுத்திக்கொண்டு என் மாயையினுல் நான் நன்கு தோன்றுகிறேன்''



சுவாமி இராமகிருஷ்ணனந்தர்

இத்தகைய தனித்தன்மை வாய்ந்த ஆற்றல் மூலமாக, எல்லேயில்லாத பரம்பொருள் ஓர் எல்லேக்குள் உட்படுத்தப்படுகிறது. இந்தச் சக்தியின் மூலமாகவே இறைவன் ஸ்தூல உடலில் அவதரிக்கிருர்.

பிரகிருதி என்பது என்ன?

தத்துவ ஞானிகளில் சிலர் பிரகிருதி என்பது மாயை என்றும், மறந்து போய்விடக் கூடிய தன்மை வாய்ந்தது என்றும் விளக்கியிருக்கிருர்கள். பிருகிருதி என்பதற்கு உற்பத்தி அல்லது சிருஷ்டியின் சக்தி என்று பொருள் கொள்ளப்படுகிறது. சிருஷ்டிசக்தி என்பது உலகில் வாழும் தன்மை வாய்ந்த சில பொருள்களை உண்டுபண்ணுதல், கண்ணிற்குப் புலப்படாதவைகளைப் பார்க்கும்படியும், அறியும்படியும், நினைக்கும்படியும் செய்தல் என்பதாகும்.

நம்மால் தொட்டு உணரக்கூடியவைகளாகவும், நினைக்கும்படியாகவும், உள்ள பொருள்கள் யாவும் ஓர் எல்லேக்கு உட்பட்டிருக்க வேண்டும். ஏனென்ருல் அறிவதும் நினைப்பதும், சிந்திக்கும் சக்தியால் ஏற்படுகிறது.

சிந்திக்கும் ஆற்றலைத் தரும் புலன்கள் ஓர் எல்லேக்கு உட்பட்டிருக்கின்றன. எல்லாவற்றையும் ஒரேசமயத்தில் ஒருவர் எடுத்து விளக்கிவிட முடியாது. நாம் ஒரே சமயத்தில் பார்க்கவும் கேட்கவும் முடியாது. நமது மனம் எல்லா பக்கங்களிலும் அறியாமையினுல் சூழப்பட்டுள்ளது. இத்தகைய ஓர் அளவிற்குட்பட்ட அறிவைக்கொண்டு அளவற்றவைகளைக் கிரகித்துக் கொள்ளுதல் முடியாத செயலாக இருக்கிறது. ஆகையால் நம்மால் அறியப்பட்டவைகள் ஓர் எல்லேக்கு உட்பட்டவைகளாகவே இருக்கின்றன.

எல்லேக்கு உட்பட்ட சக்தியைக்கொண்டு, எல்லேயற்றவைகளை எல்லேக்குட்பட்டிருப்பதாகத் தோன்றும்படி செய்வது எப்படி? செய்ய முடியாத இந்தச் செயலே கடவுள் தமக்கே உரிய தனித்தன்மை வாய்ந்த சக்தியைக் கொண்டு எல்லேயற்றவைகளை எல்லேக்குட்பட்டதாகவும், செய்ய முடியாதவைகளைச் செய்யக்கூடியவைகளாகவும், மாற்றும் திறமையை படைத்திருக்கிருர். இத்தகைய சக்திதான் மாயை என்றும் மறதி என்றும், ஒன்றை மற்றதாக நினைக்கும் செயல் என்றும் அறியப்படுகிறது.

ஸ்ரீகிருஷ்ண பகவான் ''என்னுடைய'' என்ற சொல்லால் பிரகிருதிக்கு மேலும் விளக்கம் தருகிருர். அதாவது ''இது என்னுடைய, எனக்குச் சொந்தமான தனித்தன்மை வாய்ந்த சக்தி. அந்த சக்தி (மாயை) என்பவள் சுதந்திரமானவள் அல்ல. மாயை என்பவள் என் அதிகாரத்திற்கு உட்பட்டவள். இந்தச் சக்தியால்தான் நான் என்னைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.''

ஆகையால் பிரகிருதி தனித்து இல்லாமல், எப்பொழுதும் கடவுளிடம் கலந்து இருப்பதால், தனியாகவோ கடவுளிடமிருந்து பிரித்தோ அறிய முடியாது. ஆனல் இத்தகைய மாயை சக்தி, கடவுளை அவருடைய எல்லையில்லாத சக்தியை மறக்கும்படி செய்தால், அவள் (மாயை) கடவுளை விடவும் அதிக சக்தி வாய்ந் தவளாகத்தான் இருக்க வேண்டும். ஆனல் அப் படி இல்லை. மாயை 'எனக்குச் சொந்தமான வள்' என்று பகவான் கூறுகிருர். கடவுள், தாமாகவே விரும்பிக் கேட்கும்போதுதான், அவள் அவரைக் கட்டுப்படுத்தும் சக்தியை உடையவளாக இருக்கிருள். ஒரு சேவகன் தனது தலைவனுடன் மல்யுத்தம் செய்யும்படி அனுமதிக்கப்படுவதைப் போன்றது இது. சேவ கன் தலைவனைவிடவும் சக்தி படைத்தவனுகத் தோன்றலாம். அவரை, அவன் தோற்கடிக்க வும் கூடும். ஆனல் சேவகன் உண்மையில் தலை வனின் சொல்லுக்குப் கட்டுப்பட்டவன். தலை வன் ''வெளியே போ'' என்று சொல்லி விட் டால் சேவகன் அடிபணிந்தே ஆகவேண்டும். அதைப்போலவே மாயாசக்தி என்பவளும் கட வுளின் பணிப்பெண்ணுகத்தான் இருந்து கொண்டிருக்கிருள். கடவுளிடம் மரியாதை கொண்டு அவள் சற்று விலகியே இருப்பாள். கடவுள் மாயையைத் தன்னிடம் போராடலாம் என்று அழைத்தால் மட்டுமே அவரது ஆணைக்கு அவள் அடிபணிவாள். மாயாசக்தி கடவுளை விடவும் அதிக சக்தி படைத்தவளாக ஆகிவிட முடியாது. கடவுள் ,மாயையின் சக்திக்கு உட் பட்டவரே அல்ல.

கடவுள் ஆணையிட்டுத் தம்மைக் கட்டுப்படுத் தச் சொன்னதால்தான் மாயை அவரைக்கட் டுப் படுத்துகிருள். ஆனல் கடவுள் அவளைப் போகச் சொன்னல் ஒரு சேவகனைப்போல் அவள் போகக் கடமைப்பட்டவள்.

இத்தகையத் தன்மையைக் கடவுள் பெற் றிருந்தாலும் அவரைக் கட்டுப்படுத்தும் சக்தி மாயைக்கு இல்லை. நமது இறைவன் ஸ்ரீ ராம கிருஷ்ணரும் இதை நன்கு விளக்கி இருக்கிருர். 'நல்லபாம்பின் விஷம் கொல்லும் தன்மை வாய்ந்ததாயினும், பாம்பை அந்த விஷம் துன் புறுத்துவதில்லை. அதேபோல மாயை கடவு ளிடம் உள்ள ஒரு சக்தி. விஷம் பாம்பிற்குக் கெடுதல் செய்யாததைப் போல மாயை கடவு ளின் உண்மை இயல்பில் தலையிடும் சக்தியைப் பெற்றவள் அல்ல.'

இந்த உண்மையை ஓர் அரசன் தன்னுடைய அரண்மனை நாடகத்தில் தோட்டியாக வேஷம் ஏற்பதோடு ஒப்பிட்டுச் சொல்லலாம். மன்னர் நாடகம் முழுவதும் தோட்டி வேஷம் அணிந்து வேஷம் போட்டாலும், எந்தச் சமயத்தில் வேண்டுமானுலும் வேஷத்தைக் கலைத்துவிட்டு மன்னராக இருக்கும் தன்மையை உடையவர். ஆகையால் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைத் தனது மகிழ்ச்சிக்காகச் செய்யும் தன்மையை உடையவராகக் கடவுள் இருக்கிருர். மாயைக்கும், கடவுளுக்கும் உள்ள தொடர்பு சிருஷ்டியில்தான் அடங்கி இருக் கிறது.

கடவுள் எல்லையில்லாச் சக்தி படைத்தவர். ஆகவே அடக்க முடியாத மாயையின் சக்தியை அடக்கும் வலிமை பெற்றவர்.

ஆனல், நமக்கும் மாயைக்கும் உள்ள தொடர்பு என்ன? நாம் அவளுடைய அடிமை கள். கடவுள் மாயையின் சக்தியை அடக்கும் வல்லமை படைத்த தலைவர். ஆனல் நாமோ மாயையின் அடிமைகள். நாம் அவளுடைய சக்திக்குக் கட்டுப் பட்டவர்களாக இருக்கிருேம். பின்பு நாம் எப்படி அவளைத் துறப்பது? நாம் அவளுடைய அடிமைகளாக இருப்பதால், அவள் நம்மை அழிக்கும் சக்தியைப் பெற்றிருக் கிருள். ஆனல் ஆன்மா அவளது அதிகாரத்திற்கு உட்பட்டதல்ல. இயற்கையிலேயே ஆன்மா அழிவற்றது. ஆகவே ஆன்மாவை மாயையினுல் அழிக்க முடியாது. ஆனுலும் மாயை, ஆன்மா வைத் தனது அதிகாரத்திற்கு உட்படுத்தும் சக்தியைப் பெற்றிருக்கிருள். இந்தச் சக்தியின் மூலம், அவள், பலப் பிறவிகள் எடுக்கும் சிந்தனையை ஆன்மாவை அடையும்படிச் செய் கிருள். இதிலிருந்து தப்புவதற்கு வழி எதுவுமே கிடையாதா? அனைவரையும் ஒன்று சேர்த்து பொய்மையில் ஆழ்த்தும் இத்தகைய மாயா சக்திகள் அடக்க முடியாதவைகள். மாயை உன்னை அழிக்க முடியாது. ஆனுலும் ஆதிகால முதல் நம்மைப் பல தொல்லைகளுக்கு உட் படுத்தும் சக்தி படைத்தவள் மாயை. இதை யார் விரும்புவார்கள்? வாழ்க்கை முழுவதும் பல தவறுகளைச் செய்ய ஒருவரும் விரும்ப மாட்டார்கள். ஆனல் பொய்மை சக்தி

படைத்த மாயை நம்மைப் பல தவறுகளைச் செய்ய வைக்கிறது. நாம் மாயையிடம் அன்பு பாராட்ட முடியாது. இருப்பினும் அவளே நமது ஒப்பற்ற தலைவியாக இருக்கிறாள்.

அப்படியென்றால் அவளை விட்டு ஒழிப்பது எப்படி? கடவுளின் துணை ஒன்றின் மூலமாகத் தான் அவளுடைய சக்தியிலிருந்து விடுபட முடியும் ஆதலால்தான் பகவான் பின்வருமாறு கூறுகிறார். ''இந்த என்னுடைய அடிமை (மாயை) தனது கையில் உள்ள மூன்று வலிமை மிக்க கயிற்றின் மூலம் மக்கள் அனைவரையும் மண் உலகுடன் பிணைக்கிறாள். என் ஒருவனுடைய உதவியுடன் மட்டுமே அவளின் அதிகாரத்திலிருந்து விடுபட முடியும்.'' ஒரு குழந்தை வீட்டில் உள்ள மேல் மாடிக்குப் போக விரும்புகிறது. ஆனால் போக முடியவில்லை. உடனே அது என்ன செய்யும்? அந்தக் குழந்தை உடனே தனது தாயை உதவிக்கு அழைத்து, அங்கு தன்னைக் கொண்டு போகும் படி சொல்லுகிறது.

அதைப்போல நாமும் கடவுளை அழைக்க வேண்டும். கர்வமும், அகந்தையும் கூடாது என்று பகவான் நமக்குத் திரும்பத் திரும்பச் சொல்லுகிறார். எது சரி என்று ஆராய்ந்து ஒப்புக் கொள்ளும் சக்தி நம்மிடம் இல்லை. ஆகையால் ''நான் என்னை முழுமையாக உனது பராமரிப்பிற்கு உட்படுத்திக் கொள்கிறேன்'' என்று நாம் கடவுளிடம் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும். கர்வமும் அகந்தையும் உள்ளவன் மாயையின் சக்திக்கு உட்படாமல் அவளை வெற்றி கொள்ள நினைக்கிறான். ஆனால் வெகு சீக்கிரத்தில் அத்தகையவனும் மாயையை வெற்றி காணமுடியாது என்பதை உணர்ந்து கொள்கிறான்.



# மதிப்புரை

**ஸ்ரீ ராமகிருஷ்ண ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்**

ஆசிரியர்: சுவாமி அபூர்வானந்தர்

வெளியிட்டோர்: ஸ்ரீராமகிருஷ்ண – சிவானந்த ஆஸ்ரமம், பாராஸாத், 24 பர்கணு

விலை: சாதாரண பதிப்பு ரூ. 8.50
காலிக்கோ பைண்டு ரூ. 10

ஸ்ரீமத் சுவாமி அபூர்வானந்தரின் பக்தி, சிரத்தை, பாண்டித்தியம் ஆகியவைகளின் விளைவாக 'ஸ்ரீராமகிருஷ்ண ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்' என்னும் இந்த அழகிய நூல் வெளிவந்திருக்கிறது. சம்ஸ்கிருதத்தில் வெளிவந்துள்ள இந்நூலில் ஹிந்தி மொழிபெயர்ப்பும் விசேஷ உரையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. முற்றிலும் பொருத்தமானவரைக் குறித்து முற்றிலும் தகுதிவாய்ந்த பெரியவர் கருத்தாழத்துடன் எழுதியிருக்கிறார். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களுக்கு சிறப்பாகப் பயன் படக்கூடிய நூல் இது.

—எஸ். வி. சுப்ரமணியம்

**வந்தேமாதரம் நூற்றாண்டு விழா மலர்**

விலை: ரூ. 3, அலுவலகம்: 107, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை– 600 005

வந்தேமாதரம் நூற்றாண்டு விழாக் குழுவினர், தமிழிலும் ஆங்கிலத்திலும் கட்டுரைகளைக் கொண்ட இந்த அரிய மலரை வெளியிட்டிருக்கிறார்கள். 'பாரதமே நமது தாயகம்', 'வந்தேமாதர கீதம்' ஆகிய கட்டுரைகளை முறையே த. நா. குமாரஸ்வாமி அவர்களும் த. நா. ஸேனாதிபதி அவர்களும் எழுதியிருக்கிறார்கள். வங்கமொழியில் பங்கிம் சந்திர சட்டர்ஜி படைத்த 'ஆனந்தமடம்' நாவலின், தமிழ்ச் சுருக்கத்தை த. நா. குமாரஸ்வாமி திறம்பட செய்திருக்கிறார். 'பங்கிம் பரமஹம்சரைச் சந்தித்தபோது....!' என்னும் பகுதியில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் பங்கிம் சந்திரருக்கும் நடந்த உரையாடலில் ஒருபகுதி இடம் பெற்றிருக்கிறது.

மற்றும் 'வந்தேமாதரம், தமிழகத்தில் எதிரொலித்த வந்தேமாதரம், நாடு உயர ஒரே வழி, மீண்டும் மீண்டும் நினைவு கூறுவோம், விடுதலை வேட்கைக்கு விழா, பாரதி பாடிய வந்தேமாதரம், பாரத மாதாவுக்குப் பளிங்காலயம், வந்தேமாதரம்–வாழ்க்கை நெறி' ஆகிய கட்டுரைகளோடு ஆங்கிலக் கட்டுரைகளும் சேர்ந்து, மலர் வெறும் மலராக இல்லாமல் நறுமணம் கமழ்வதாக அமைந்துள்ளது. நூற்றாண்டு விழாக்குழுவினர் ஏற்றுக் கொண்ட இலட்சியம் பாராட்டுதற்குரியது. அவர்கள், தமிழ் மக்களின் வாழ்த்துதலுக்கும் வணக்கத்திற்கும் உரிய பணியை அமைதியாகச் செய்திருக்கிறார்கள்.

—விவேகானந்தப் பித்தன்





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—5—77 முதல் 15—6—77 வரை)

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 8 மணி வரை.

| | |
|---|---|
| மாலை 4 முதல் 4.20 வரை | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (22—5—77 & 5—6—77) |
| | ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (29—5—77 & 12—6—77) |
| மாலை 4.20 முதல் 4.30 வரை | தியானம் |
| மாலை 4.30 முதல் 5.30 வரை | சொற்பொழிவு (தமிழ்) |
| | **ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம்** டாக்டர் டி. எம். பி. மகாதேவன் (22—5—77) & 12-6-77) |
| | **ஸ்ரீமத் பாகவதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (29-5-77 & 5-6-77) |
| மாலை 5.30 முதல் 6.30 வரை | சொற்பொழிவு (ஆங்கிலம்) |
| | **ஸ்ரீமத் பகவத்கீதை**—சுவாமி தபஸ்யானந்தர் |

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**

சனிக்கிழமை மாலை 5.45மணிக்கு

1. **ஸ்ரீமத் ராமாயணம்** டாக்டர் என். வீழிநாதன் (21—5—77 & 28—5—77)
2. **இராமாயணத்தில் ஆராய்ச்சி** திரு. பி. ராமகிருஷ்ணன் (4—6—77)
3. **கஜேந்திர மோட்சம்** திரு க. கோதண்டராமன் (11—6—77)

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—(மாலை 5.45)

| | |
|---|---|
| திங்கள்: | (ஆங்கிலம்) **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்** —சுவாமி அம்ருதானந்தர் |
| செவ்வாய்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்** —சுவாமி கபீரானந்தர் |
| புதன்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர் |
| வியாழன்: | (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி: | (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| வெள்ளி: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6.30 சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம் 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.) |

**விசேஷ தினங்கள்:**

அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (22—5—77)
ஸ்ரீபலஹாரிணி காளி பூஜை—செவ்வாய் (17—5—77)
ஸ்நான பூர்ணிமா—புதன் (1—6—77)
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்: ஏகாதசி தினங்களில் ஆரதிக்குப் பிறகு (29—5—77 & 12—6—77)

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

தொலைபேசி: 71231

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசுவாமி ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 97 லாய்ட்ஸ் ரோடு சென்னை 600086